# *Tirāviṭa nāṭu*

# *Malar 13, ital 12*

# *September 19, 1954*

Record no. 1005

போன் தெ. 15. விலை 2 அணு. REGD No. 4642

# திராவிடநாடு

மலர் 13 | 19—9—54 | இதழ் 12



## டாக்டர் கூறுகிறார்!

"இந்திய அரசியலில் தற்போது முதலாளிகள், பிராமணர்கள் கூட்டாகச் சேர்ந்திருக்கிறார்கள். இதைச் சீக்கிரமே ஒழிக்கவேண்டும்."

உத்தரப்பிரதேசத்தில், நேரு பண்டிதரின் சொந்த மாகாணத்தில் இந்த முழக்கம்!!

பணமூட்டைகளும் பார்ப்பனரும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள் இந்த, அக்ரமத்தை அழித்தாகவேண்டும் என்ற முழக்கம், நேரு பண்டிதரின் மாகாணத்தில்!!

காலக்குறி என்போம் இதனை. களிப்பூட்டும் செய்திமட்டுமல்ல, நம்பிக்கை நாதமாகவே அமைந்திருக்கிறது.

ஏழை எளியவர்களைக் காப்பதன்றி வேறொன்றறியாத உன்னதமான 'ஸ்தாபனம்' எமது காங்கிரஸ், என்று தலைவர்கள் பேசத்தான் செய்கிறார்கள்; வேறெப்படி அவர்கள் பேசமுடியும்! ஜனங்களை எவ்வளவு சமர்த்தாக மயக்கி, மடக்கிவைக்கிறது பார், மகத்தான காங்கிரஸ், என்று சிற்றரசர்களும் சீமான்களும் புளகாங்கிதமடைகிறார்கள். உண்மை அடியோடு மறைக்கப்படுகிறதே, மக்களை மயக்கிச் செயலற்றவர்களாக்கிடும் மாபெரும் தீங்கு இழைக்கப்படுகிறதே, இந்துவின் இரைச்சலில், மித்திரனின் பாடலில், தினமணியின் திருப்புகழில் சொக்கிக் கிடக்கும் மக்கள், இன்று, அரசியலை ஆட்டிப் படைப்பவர் யார் என்ற உண்மையை எங்கே அறியப்போகிறார்கள், நாம் விடுத்திடும் எச்சரிக்கை, தந்திடும் விளக்கம், எங்கே மக்கள் செவியில் புகப்போகிறது, என்று எண்ணி ஏங்கிடும் நமக்கெல்லாம், கவலை விடுக! உண்மை வெல்லும்! என்று கூறுவதுபோல, முதலாளிகளும் பிராமணர்களும் பெற்றுள்ள ஆதிக்கத்தைக் கண்டித்துப் பேசப்படுகிறது. மகிழ்கிறோம்! பாராட்டுகிறோம்!!

உண்மையை எடுத்துரைக்க உள்ள உரம் வேண்டும். அதிலும், செல்வாக்குக்கொழுந்துவிட்டெரியும் நிலையிலுள்ள காங்கிரஸ் கட்சியின் நோக்கும் போக்கும் நாட்டுமக்களுக்குக் கேடு தருவதாக அமைந்திருக்கிறது என்ற உண்மையை எடுத்துரைக்கவோ, உள்ள உரம் மிகமிக அதிகமாகவேண்டும்.

சிங்காரி! குமாரி! விலை, அவள் புருவம்! முத்து, அவள் பற்கள்! முறுவல், உள்ளத்தை நெகிழச் செய்கிறது!— இத்தகைய இள மங்கை, எச்சில் துப்பி, அது மேலாடைமீது பட்டாலும், கண்கவர் காரிகையரைக் கண்டால் நெஞ்சு நெகிழ்ந்திடும் காளைக்குக் கடுங்கோபம் பிறப்பதில்லை, "தெரியாமல்......மன்னிக்கவேண்டும்......" என்று அந்தத் தத்தை கூறுவாள், இவனோ, தழதழத்த குரலில், கனிவு வழியும் நிலையில் தையலைப் பார்த்து, "பரவாயில்லை ......பரவாயில்லை" என்று கூறுகிறான். பன்னீரோ பாகோ......என்றாகிவிடுகிறது, துப்பியது!! நரை! ஏழ்மை!! அந்த மாது, தன் பேரன் காணமற்போய் விட்டதால் பதைத்து, தேடி அலையும் போது, மேலே மோதிக்கொள்கிறாள் என்று வைத்துக்கொள்ளுங்கள், வசைமொழி, வெள்ள வேகத்தில் கிளம்பித் தாக்கும், கரம்கூட நீளும், பொறுமை இருக்காது—இயல்பு!

காங்கிரஸ், கவர்ச்சிகரமான வனிதாமணி! வயது அறுபதுக்கும் அதிகமாகிவிட்டதே, என்பீர்கள்! நாம் குறிப்பிடுவது, பதவிப்பாவையாகிய காங்கிரசை, பரங்கியுடன் போரிட்ட பழைய காங்கிரசை அல்ல! பதவிப்பருவத்தை அடைந்த பிறகு, காங்கிரசின் நோக்கும் போக்கும், கடுமையும் கொடுமையும், மிகுந்ததாகிவிட்ட போதிலும், தோற்றம் கண்டு துதி பாடுவோர், குறை கூறுவது, கண்டிப்பது, கூடாது என்று எண்ணி, போற்றவும், உறவு கொண்டாடவும் முன்வந்துவிட்டனர். இதிலே அவர்களுக்கு இன்பம்மட்டுமல்ல, பலனும் கிடைக்கிறது. இந்நிலையில், உண்மையை எடுத்துரைக்கும் நேர்மை பட்டுப்போகிறது, பூவையின் புன்னகையிலே சொக்கிக் கிடக்கும் இளைஞர்போலாயினர், தலைவர்கள் பலப் பலர். இந்தச் சூழ்நிலையிலும், உண்மையை உரைத்திட அஞ்சலாகாது என்று, இந்திய அரசியலில் முதலாளிகளும் பிராமணர்களும் ஆதிக்கம் செலுத்துகிறார்கள், என்று எடுத்துக் கூறிக் கண்டிக்க ஒரு தலைவர் முன் வருகிறார் என்றால், பாராட்டாமலிருக்க முடியுமா. அதிலும் அவர், கம்யூனிஸ்டாகவோ, திராவிட இயக்கத்தவராகவோ இருந்தால் பாராட்டக்கூடத் தேவையில்லை, பேசினவர், சோஷியலிஸ்டுத் தலைவர், டாக்டர் ராம் மனோகர் லோஹியா!

முதலாளிகளும் பிராமணர்களும், ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்று கூறியிருந்தால், டாக்டர் லோஹியாவின் மேதையின் முழுஅளவு விளங்கியிராது; அவர், நிலைமையைத் தெளிவாகப் புரிந்துகொண்டு, தீரமாக எடுத்துரைக்கிறார், என்பதை விளக்கமாக்கும் வகையில், முதலாளிகளும் பிராமணர்களும் கூட்டாகச் சேர்ந்திருக்கிறார்கள் என்று கூறியிருக்கிறார்.

செச்சே! இது என்ன வகுப்புவாதம், ஏன் இந்த இனவெறி, முதலாளித்துவ ஆதிக்கம், வர்க்கபேதம், என்று தானே கூறவேண்டும், பிராமணர்கள் என்று ஒரு தனி வகுப்பாரைச் சுட்டிக்

காட்டிப் பேசுவதா, இதென்ன ஈரோட்டுத்தனம், என்றெல்லாம் கல்கியாரும் கேட்பார், கம்யூனிஸ்டுகளும் கேட்பர். இந்திய அரசியலைத் தெளிவாகப் புரிந்துகொண்டவர்கள் மட்டுமே, இந்த நெஞ்சு உரத்துடன், உண்மையை எடுத்துரைக்கமுடியும். டாக்டரின் திறமையையும் தீரத்தையும் நாம் பாராட்டுகிறோம். சோஷியலிஸ்டுக் கட்சியில், இந்த மனப்பாங்கு பெருகிப் பரவவேண்டும். பெருமதி படைத்ததாக எண்ணிக்கொண்டுள்ள குறைமதியினர் சிறுசொல் கூறுவர், சீறி எழுவர், அஞ்சலாகாது, உண்மையை உரைப்பதால் ஊறு நேருமோ என்று கவலைப்படுதலும் கூடாது. உண்மை நிச்சயம் வெல்லும், என்றைக்கேனும் ஓர் நாள்.

செங்கோலும் ஜெபமாலையும் ஆதிக்கக் கருவிகள், நீண்டகாலமாக.

உருவிய வாளைக் காட்டியும், உருட்டும் ஜெபமாலையைக் காட்டியுமே, பாமரமக்களை ஆதிக்கம் புரிய முடிந்தது.

கருவிகள், காலத்தால், அளவும் உருவும் (அவ்வப்போது) மாறின, எனினும், அடிப்படை முறை, எப்போதும்போலவேதான் இருந்துவருகிறது; அரசியல், அடித்து ஆதிக்கம் கொள்வோன், அச்சமூட்டி ஆதிக்கம் செலுத்துவோன், எனும் இரு சாராரிடமே சிக்கிக் கிடக்கிறது.

கோல் மறையலாம், ஜெபதபக் கோலம் மறையலாம், இருவகை மனப்பான்மை கொண்டோரும் இருக்கத்தான் செய்கிறார்கள், கூட்டாகத்தான் வேலை செய்கிறார்கள், டாக்டர் கூறியபடி, அரசியலில், ஆதிக்கம் செலுத்தித்தான் வருகிறார்கள்.

முதலாளிகள்-பிராமணர்கள்-என்று இருவகை, ஒருவகையில் உண்மைதான், மற்றோர் வகையில் பார்த்தாலோ, இரண்டும் ஒரே வகைதான், என்பது புலப்படும்.

பெரியார்தான் முதன் முதலில், முதலாளிகள் என்றால் ஏழையின் உழைப்பைச் சுரண்டிக் கொழுக்கும் பணக்காரன் மட்டுமல்ல, பாமரமக்களின் அறிவையே சுரண்டிக் கொழுக்கும் பார்ப்பனரும் முதலாளிகளே, அவர்கள் பிறவி முதலாளிகள் என்று எடுத்துரைத்தார்.

காரல்மார்க்ஸ் படித்தால் இப்படிப் பேசுவாரா, போல்ஷிவிசம் தெரிந்தால் இப்படிப் பேசுவாரா, என்று இந்த இரு பதங்களைப் பஜனை செய்வதன் மூலம் தலைவர்களாகிவிட்ட சிலர், கூறினர், கேலி பேசினர். டாக்டர் லோஹியா பணக்காரரும் பிராமணர்களும் கூட்டாகச் சேர்ந்திருக்கும் உண்மையைக் கூறுகிறார்!

பூதேவர், பூஜாரி, புரோகிதன், கடவுள் தரகன், மோட்சலோக வழிகாட்டி மீதூர்களிடம் உறவாடித் தகவல் தருவோன்;—என்று பார்ப்பனர்களைப் பாமரர் நம்புவதால், அவர்களுக்கு-அரசியலில் ஆதிக்கம் செலுத்த முடிகிறது.

பேழையுடையான் ஏழையை அடிமைகொண்டு ஆதிக்கம் செலுத்த முடிகிறது.

ஒரு மந்திர ஒலியால், சிறு சடங்கினால், ஓமப்புகையால், உன்னை வாழ்விக்கவும் முடியும், ஒழித்திடவும் முடியும், உன்னை பொன்காய்க்கும் புனிதனாக்கவும் முடியும், புழு நெளியும் குழியில் தள்ளிடவும் முடியும், நான் மகிழத்தக்க வகையில் நீ நடந்துகொண்டால் ரம்பையை ஆலிங்கனம் செய்துகொள்ள வழி கிடைக்கும், திலோத்தமையின் அதரபானம் கிடைக்கச்செய்வேன், என்மனம் கோணும்படி நடந்துகொண்டாலோ, பழுக்கக் காய்ச்சிய இரும்புக் கம்பத்தை இறுகப் பிணைத்துக்கொள்ள வேண்டிய நிலையை உண்டாக்குவேன், அமிர்த பானம் வேண்டுமா, அட்டைக்குழி அரணைக்குழி வேண்டுமா, எது வேண்டும் சொல் மனிதா!—என்று கேட்டு, பாமரரை மிரட்டி அடிபணியச் செய்யும் ஆதிக்கம் கொண்டவர் புரோகித வகுப்பார்—பார்ப்பனர்.

இந்த இரு ஆதிக்கக்காரரும் இந்திய அரசியலில் இன்று ஆதிக்கம் செலுத்தத்தான் செய்கிறார்கள்.

பணக்காரரிடமாவது, பல்வேறு காரணங்களால், பாமர மக்களுக்கு, அகற்ற முடியாத அளவிலும் வகையிலும் அருவருப்பு ஏற்பட்டுவிட்டது—சிரித்த முகம் காட்டும் சிற்றரசனானாலும், சீலம் பேசும் சீமானானாலும், புன்னகைப் பாணம் வீசும் பூமானானாலும், மக்கள் அவர்களை அன்புக் கண்கொண்டு நோக்குவதில்லை. அருவருப்பு இருப்பதுகூட முக்கியமல்ல, அச்சம் நீங்கிவிட்டது — நீங்கியேவிட்டது. பணக்காரன் பரிவுகாட்டினால் கூட, பசப்புகிறான், என்று கூறவும், அவன் ஏழைகளுக்கு இதம் தரும் ஏற்பாடுகளைச் செய்தால் ஏய்க்கிறான் என்று கூறவும் மக்கள் தயாராகிவிட்டனர். காட்சிக்கு எளியோனாகக் கனவான் காணப்பட்டால், வேஷம்போடுகிறான் என்று கேலிபேசவும், படாடோபமாகக் காணப்பட்டால், அட்டகாசத்தைப்பார், என்று வெகுண்டுரைக்கவும் மக்கள் முன்வந்துவிட்டனர். ஆனால் பார்ப்பனரைப் பற்றியோ அச்சம் இன்னமும் இருக்கிறது, அருவருப்பும் எழவில்லை. காரணம் என்ன? பார்ப்பனீயம், எனும் முறை பார்ப்பனரால் ஆக்கப்பட்டும் காக்கப்பட்டும் வருவது என்றாலும், பாமரரும் தங்களையும் அறியாமல் அதற்கு இடமளித்து, உரம் அளித்து, உயிர் அளித்துவருவதுதான். எனவேதான் பார்ப்பனீயம் ஒழிக்கப்படவேண்டும் என்று தி. மு. க. கூறுகிறது. உடலில், உள்ளே இரத்தம் கெட்டிருக்கிறது; மேலே உள்ள கொப்புளங்களை ஊசிகொண்டு குத்தி, சீழை வெளியாக்கிவிட்டால் போதாது, 'இரத்த சுத்தி' ஏற்பட வேண்டும் — கொப்புளங்கள் ஏற்படச் செய்யும் கெட்ட நீர், நோய், பார்ப்பனீயம் ஒழிக்கப்பட்டாக வேண்டும்.

முதலாளித்துவமும் பார்ப்பனீயமும், அரசியலில் செலுத்தும் ஆதிக்கத்தைக் களைந்தெறிய, சோஷியலிஸ்டுகள் முனைந்து பணியாற்றும்போது, நிச்சயமாக, தி. மு. க. வின் ஒத்துழைப்புக்கிடைக்கும். டாக்டர்லோஹியா கூறும் இந்த உண்மையை ஊராருக்குக் கூறவும், ஏன் இந்தஆதிக்கம் ஏற்பட்டது, எப்படி இந்தஆதிக்கம் நிலைத்திருக்கிறது, எத்தகைய உரம் அதற்கு ஊட்டப்படுகிறது, என்பதை எடுத்துரைத்து, மக்களிடையே விழிப்புணர்ச்சியும் எழுச்சியும் ஏற்படச் செய்யவும், சோஷியலிஸ்டுகள் பணியாற்றுவார்களானால், வழியில் திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்களை நிச்சயமாகச் சந்திக்கலாம்.

ஆதிக்கக்காரர் இருவகை — அவர்கள் கூட்டாகவும் சேர்ந்திருக்கிறார்கள், ஒருவன் வயிற்றில் அடிப்பவன், மற்றவன் தலையில் அடிப்பவன்,—ஆம்!—டாக்டர் லோஹியா கூறியது போல, இதைச் சீக்கிரமே ஒழிக்க வேண்டும்—ஆனால், எப்படி? அதைத் தீர்மானிப்பதுதான், பிரச்சினைக்குப் பரிகாரம் தேடுவதாகும். சோஷியலிஸ்டுகள் இந்தப் பாதையில் நுழைந்தால், திராவிட முன்னேற்றக் கழகத்தினரைக் காணலாம், நோய் இது என்று டாக்டர் கூறிவிட்டார், இனி இந்த நோய் போக்க மருத்துவ முறை என்ன என்று கண்டறியும் நோக்குடன் சோஷியலிஸ்டுகள் கிளம்பினால் மூலிகை சேகரித்துக்கொண்டிருக்கும் திராவிட முன்னேற்றக் கழகத்தினரை ஆங்காங்கும் காணலாம். —

## கவனித்து வருகிறோம்

தமிழரசுக் கழகத்தினர் காங்கிரசை விட்டு விலகியது கேட்டு, திராவிட முன்னேற்றக் கழகத்தினர் களிப்பு அடையவில்லை — என்று ம. பொ. சி. திருச்சிக் கூட்டத்தில் கூறி இருக்கிறார்.

களிப்பு அடையவேண்டும் என்பதற்காக இதைக் கூறுகிறாரா, அல்லது களிப்பு அடையாதீர்கள் என்று கூறுகிறாரா என்பது புலனாகவில்லை.

களிப்புடனோ கலக்கத்துடனோ, நாம், இந்த வெளியேற்றத்தைக் கவனிக்கவில்லை—ஒப்புக்கொள்கிறோம்.

ஆனால் கவனித்து வருகிறோம் — புல்லாகிப் பூண்டாகி, என்று வளருகிறதா, அல்லது உடல் கருகி உள்ளீரல் பற்றி உருகிவிடுகிறதா, என்ன ஆகிறது, என்று கவனித்து வருகிறோம்; அரசியல் அக்கரையால் அல்ல, ஆற்றல் எவ்வழிச் செல்கிறது என்று அறியும் அவாவுடன்.



# அங்கலாய்ப்புக் கூடமாக்காதீர்!

"டேய்! முட்டாள்! மடையா! ம்ந்தி! எவ்வளவு வாய்த்துடுக்கடா உனக்கு. ராஸ்கல்! மண்டைக் கனம் இவ்வளவாகிவிட்டதா!..."

"ஐயா! ஐயா! அவசரப்படாதீர், ஆத்திரப்படாதீர்! பொறுமை, பொறுமை......"

"பொறுமையா! பொறுக்கத்தான் முடியுமா! ஆஹா! உஹூ என் மனம் குமுறுகிறது! மீசை... ஓஹோ! இல்லை......என் தோளும் தாளும் பட படவென ஆடுகின்றன! இருதயம்கூட மிகமிக வேகமாக அடித்துக்கொள்கிறது! ஏன், என் அருமையான பங்களாக்கூட அப்படியேசுற்றுவதுபோல இருக்கிறது! தாங்கிக்கொள்ள முடியவில்லை. பொறுத்துக்கொள்ள முடியவில்லை. எவ்வளவோ அடக்கி அடக்கிப் பார்க்கிறேன், முடியவில்லை........."

"நண்பரே......!"

"ச்சீ! நீ என்னை நண்பனென்று சொந்தம் கொண்டாடுவதா! சிங்கம் எங்கே, சிறுநரி எங்கே!! சங்கநாதம் ஒலிப்பி நமது இனத்தின் பகைக் கூட்டத்தை விரட்டி அடிக்க 'விரதம்' பூண்டு, கங்கணம் கட்டிக்கொண்டு, காடு மேடு என்று பாராமல், கடும் பசியையும் பொருட்படுத்தாமல், குத்திக் குடலெடுக்கவும் துணிந்து கிளம்பியுள்ள நான் எங்கே! கேவலம் சாந்தம் சமரசம் என்று சாகசம் பேசிடும் நீ எங்கே! நான் காலதேவனாகிவிட்ட காதையை நீ அறியாய், கசடனே! அசடனே! கபோதியே! என் சிலம்பம் கிளப்பும் சிம்மநாதம் கேட்டு, அஞ்சி நடுநடுங்கி, ஐயோ அப்பா! அம்மா! என்று அலறி, பகைவர் கூட்டம், சந்து பொந்து தேடி ஓடுகிறது! சத்துற்றுச் சக்கையே! நீ எனக்கு எம்மாத்திரம்! என்னைப் போய், எவ்வளவு தைரியம் உனக்கு நண்பா! என்று கூப்பிட......"

"இரவு முழுவதும் உட்கார்ந்து பேசுவோமே, வேப்பமரத்தடியில்... அந்தப் பழைய நாட்களை எண்ணி, நண்பரே! என்று கூறிவிட்டேன், பொறுத்திடுக!"

"மீண்டும் அந்தச் சொல்லை வீசாதே! வேப்பமரத்தடியிலே ஆயிரம் பேசி இருப்பேன்! கடற்கரை மணலில் அமர்ந்து கதை கதையாய்ப் பேசி இருப்பேன்! நெடுந்தொலைவிலிருந்து கட்டுரைகள்கூடத்தான் வரைந்து அனுப்பி இருப்பேன். அது அந்தக் காலம். கலெக்டர் கண்ணாயிரத்திடம் அவன் தாசில் உத்தியோகம் பார்த்தபோது வாங்கிக்கொண்ட கோழிக்குஞ்சுகளின் கணக்கையா கவனப்படுத்துவது......"

"நான், அந்தப் பழையநாள் பேச்சை வெளியே சொல்லமாட்டேன், பயப்படாதீர் ஐயா! பயப்படாதீர்! இப்போது உமக்குக் கிடைத்துள்ள பவிசும் பரிசும் கெடாது—நிச்சயமாக என்னால் கெட்டுப்போகாது......"

"என்னடா மிரட்டுகிறாய், கூத்தாடி......!"

"கூத்தாடி என்று கேலியாக, பொதுவாகக் கூறினால் சரிப்படாது. ஏனெனில், கூத்தாடியாக நீரும் இருந்திருக்கிறீர்"

"அது வேறு விஷயம்......"

"ஆமாம், ஆமாம்! அது நிச்சயமாக வேறு விஷயந்தான் — ஆடி அலுத்துப்போய், பலன் காணாமல் பரிதாபத்துக்குரியவரான கூத்தாடி நீர்......"

"டேய், வாயாடி!......ஜாக்ரதை!",

"ரொம்ப ரொம்ப ஜாக்ரதையாக இருக்கிறேன். வேப்பமரத்தடியில் உட்கார வைத்துக்கொண்டு, நீர், ருசிகரமான உண்டியும் சுவையான பானமும் தந்தபடி 'உசுப்பி'விட்ட காலத்திலேயே, நான் ஜாக்ரதையாக இருந்துவந்தவன்—தெரியுமே உமக்கே! இப்போதா அவசரப்படுவேன்—புதிய பொறுப்புகள் உள்ளனவே!!"

"ப்பூ! பொறுப்பு! பொறுப்பு! புடலங்காய்!!"

"கிடக்கட்டும்! மடையா, முட்டாள்! என்றெல்லாம் வேகமாகத் திட்டுகிறீரே, காரணம் என்ன? என்ன தவறு செய்துவிட்டேன்? உமக்கு என்ன கெடுதல் செய்தேன்?"

"எனக்குக் கேடா! ஆயிரம் செய் பொருட்படுத்தமாட்டேன்! உன் திமிர், நீ சாமராஜிடம் சண்டைக்குப் போகப்போவதாகச் சொன்னாயாமே, விடுவேனா, உன்னை......"

"சாமராஜிடம் நான் சண்டைக்குப் போகப் போகிறதாகவே வைத்துக்கொள்ளும், உமக்கு ஏன் குத்துகிறது. நீர் என்ன சாமராஜுக்கு மெய்ப்பாதுகாவலரா!"

"உனக்கு என்ன தெரியும் எங்கள் நட்பு! நேற்று மாலைகூட, சாமராஜ் அரண்மனையில் சமயற்கட்டுக்குச் சென்று அங்கு இருந்த பச்சை மிளாய், வெங்காயம், வெண்டை, கத்தரி இவைகளை எல்லாம் பார்த்துவிட்டு வந்தேன்......"

"ரொம்பப்பேர் பார்க்கிறார்கள்!"

"என்னை அழைத்துக்கொண்டு போய்க் காட்டினார்கள்! எனக்கு அங்கே உள்ள மதிப்பு எவ்வளவு தெரியுமா! என் தலைவருக்கே நான்தான் அந்த இடத்துச் சேதிகளைச் சேகரம் செய்துவந்து கூறுகிறேன்......"

"வாழ்க உமது வளம்! வளர்க உமது நிலை! நிலைத்திடுக உமது செல்வாக்கு! ஆனால், உமக்கு யார் சொன்னார்கள், நான் சாமராஜிடம் சண்டைக்குக் கிளம்புவதாக......!"

"சொன்னார்கள்!"

"வழியே போகிற வக்கிரபுத்திக்காரன் சொல்கிறவற்றை எல்லாம் கேட்டுக்கொண்டு குதிப்பதுதான் உமது அறிவுடைமையா? நிலை உயர்ந்துவிட்டது என்கிறீர், உமது போக்கு, முன்பு இருந்த மட்டத்திலேயே இருக்கிறதே. சந்தைக்கடை சுந்தரம் செட்டி வாடகைப் பணம் அதிகம் கேட்கிறான், சாமராஜர் இதிலே தலையிட்டு, வாடகையைக் குறைக்கவேண்டும், அவர் இதிலே தலையிடாவிட்டால், சந்தைக்கடை சுந்தரம் செட்டியின் வாடகைப் பணத்தைக் குறைத்திட நான் ஏதாவது செய்தாகவேண்டிவரும் என்றுதான் நான் சொன்னேன். சாமராஜர்மீது பாய, நான் ஏதோ சல்லடம் கட்டிக்கொண்டதுபோல

வும், சாமராஜ்மீது தூசு விழுந்தால் கூடத் துடிதுடித்து எழும் அளவுக்குஉமக்குஏதோ அவர்மீது பாசம் சுரந்திருப்பதுபோலவும், என்மீது பாய்ந்து, பிய்த்துப்போடக் கிளம்புவதுபோலவும், ஏன் நடிக்கிறீர்! சாமராஜர், சண்டை ஏற்பட்டுவிட்டால், தாமாகவே சமாளிக்கக்கூடியவர்தான். நீர் ஏனய்யா, அழையா வீட்டுக்குள் அரை டஜன் பிள்ளைகளோடு நுழையும் விருந்துகேடியாகிறீர், உமக்கென்று உள்ள வேலையைப் பாரும்......”

“என் வேலை என்ன தெரியுமா... என்ன தெரியுமா......”

“எந்தெந்த நேரத்தில், எவனெவன் இனிப்பாகப் பேசுகிறானோ அவனிடம் இளித்துக்கொண்டு நிற்பது, உமது வேலை......!”

“ஆஹா!...பார், பார்! அடுத்த கட்டுரையில்......”

“இது ஆயிரத்து எட்டாவது, இன்னும் ஒன்று சேர்ந்தால்தான் என்ன...தாராளமாகச் செய்யும்... இப்போது சாமராஜருக்கு பாதுகாவலர்! சில காலத்துக்குமுன்பு சம்மட்டியாருக்கு சிப்பந்தி!! இப்படியேதான வாழ்வு இருக்கவேண்டும். முன்பு சம்மட்டியாரைக் கிளப்பிவிட்டு, என்னை ஒழிக்க எண்ணினீர்—இப்போது சாமராஜரைத் தூக்கிவிட்டு சாய்க்கலாம் என்று நினைக்கிறீர். நோக்கமும் தவறு, முறையும் தவறு!! ஒரு கதை கூறுகிறேன், கேளும்......”

“கதையா! கதையா! கேளேன், கேளேன்! அரசியல் பிரச்னைகளில் முழுக்க முழுக்க இறங்கிவிட்டிருக்கிற எனக்கு, நாது இனத்தின் வைரிகளைத் துரத்துவதற்கான திருநாளைக் குறித்துச் சதா சர்வ காலமும் சிந்தனை செய்த வண்ணம் உள்ள எனக்கு, உன் கதை காதில் ஏறுது, மேலும் ஒரு பெரிய அரசியல் தலைவன், கதைபேசமாட்டான். வேண்டுமானால் உன் கதையை, எவனாவது சினிமாக்காரனிடம்கொடு—பணம் கொட்டிக் கொடுப்பான்—கொள்ளை அடி—அடி. கொள்ளை... ......”

“ஐயா! ஐயா! ஏன், ஏன்! ஏன் இப்படி விழி அப்படியே நின்றுவிட்டது...... இதோ, இப்படி......மயக்கமா...... இதுஎன்ன அதிர்ச்சி...... ......ஓஹோ! சினிமாக்காரன் எனக்குப் பணம் தருவான் என்று எண்ணியதாலே ஏற்பட்ட அதிர்ச்சியா!

அட பாவமே! கொஞ்சம் சமாளித்துக் கொள்!! என்ன செய்யலாம்! தந்து தொலைக்கிறேன, பாவி!! போகட்டும், உமது முயற்சியும் விரைவிலே பலிக்குமாக!! உண்மையிலே ஒரு வேடிக்கை தெரியுமா உமக்கு. எனக்கு சினிமாக்காரன் பணம் தரும்போது கூட அவ்வளவு சந்தோஷம் இருப்பதில்லை, சேதி கேட்டு, நீர் எப்படி எப்படித் துடிக்கிறீர், பதறுகிறீர், பதுப்பிரயோகப் பயிற்சியில் ஈடுபடுகிறீர், என்பதை எண்ணிப் பார்க்கும்போதுதான், எனக்கு அலாதியான சந்தோஷம். கிடக்கட்டும், இது சினிமாக் கதை அல்ல, கேளும். ஒரு ராஜா ஒரு குரங்கை வளர்த்தானும். தூங்கும்போது, ராஜா, குரங்கு கையிலே ஒரு வாளைக் கொடுத்துவிட்டு, யார் வந்து தொல்லை கொடுத்தாலும் சரி, ஈ, எறும்பு, கொசுவாக இருப்பினும், தயங்காதே, ஒரே வெட்டு, இந்தக் கத்தியால், என்று கூறினானும். குறட்டைவிட்டான்! யாரும் வரவில்லை!! ஒரு ஈ மட்டும் வந்ததாம், அரசன் தோள்பட்டையில் அமர்ந்ததாம். வானரவீரன் வாளா இருப்பானா, போட்டான் ஒரு வெட்டு, ஈமீது, அரசன் ஆணையின்படி! ஈ பறந்தது, மன்னனின் கரம் துண்டாகிக் கீழ விழுந்தது!! கதை இது. மறந்தே போனேன், குரங்கு என்று கதையில் வருவது கண்டு, தங்களைக் கேவலப்படுத்துவதாக எண்ணிக்கொண்டு எரிச்சலடையாதீர். குரங்கு என்று இருப்பதை, ஆர்வமிக்க பணியாளன் என்று வேண்டுமானால் மாற்றிக்கொள்கிறேன். காமராஜருக்கு, இப்படிப் பட்ட ஆர்வமுள்ள ஆதரவாளர்கள் இருப்பது, அவருக்கேதான் ஆபத்து......”

“தூ! தூ! உன்னோடு பேசமாட்டேன், போ! அடுத்த கட்டுரையில் பார் உன்னை......”

“அடுத்தடுத்து வரட்டும், அதே போது, சிறிதளவு தெளிவும் பிறக்கட்டும். விளக்குக் கம்பத்தின் நிழலைக் கண்டு பகைவனென்று எண்ணிக் கொண்டு போரிட்ட பித்துக்குளியின் போக்கை மட்டும் மாற்றிக்கொள்ளும், அது போதும். உமக்காகச் சொல்லவில்லை, நீர் சார்ந்திருக்கும் இயக்கம்—நானும் இருந்த இடம்தான்—மகத்தான காரியத்தைச் சாதிக்க வேண்டிய மக்கள் சக்தி. அதை வீணாக, வயற்றெரிச்சல் கூடமாக மாற்றிவிடாதீர், பல்லாயிரவர் பாடுபட்டு வளர்த்த இயக்கம், அதைப் பொச்சரிப்புக் கூடமாக்கிவிடாதீர்! ஆயிரவருக்கு மேல் சிறை சென்று அருமையாக வளர்த்த இயக்கம். அதை ஐயோ! அவன் வளருகிறானே!! என்று அடித்துக்கொண்டு அழுகிற அங்கலாய்ப்புக் கூடமாக்காதீர்.”

★ பிறர் மனதைப் புண்படச் செய்ய வேண்டுமென்றே பேசுவோர் பற்றிய விளக்கம் தர, இந்த உரையாடல்.

காமராஜர்—கவர்னர் சம்பளம்—கிளர்ச்சி—அதற்கு கண்டனம், என்பவைகளைக் குறித்து இதுதீட்டப்படுவதாகக் கருத வேண்டாம்.

★

## குடியாத்தம்தான் தீர்ந்துவிட்டதே!!

ஆச்சாரியாரின் புதிய கல்வித் திட்டத்தை ஒழித்ததால், தமிழகத்தின் ஒப்பற்ற தலைவர்களில் முக்கியமானவர், மக்கள் குறைக்கு மதிப்பளிப்பவர் என்று காமராஜர் போற்றப்படுகிறார்—போற்றுகிறோம்.

குடியாத்தம் தேர்தலில், சொந்தத் தேர்தலிலே கூட அதிக சிரத்தை எடுத்துக்கொள்ளாத பி. டி. ராஜன் உட்பட கம்யூனிஸ்டல்லாத எல்லாக் கட்சியினரும் காமராஜருக்கு ஆதரவு தந்தனர்—வெற்றி அமோகம்!

இப்போது, தயார்! தயார்! உங்கள் தலையில் இடிவிழப் போகிறது என்று நிதி அமைச்சர் சுப்ரமணியனார் அறிவிக்கிறார்.

ஆச்சாரியார் கல்வித்திட்டம் ஒழிக்கப்படவில்லை — நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது, சில திருத்தங்களுடன், விரைவில் அது புகுத்தப்படும் என்று மிரட்டுகிறார்.

காமராஜர் ஏற்படுத்திவைத்திருக்கும் சமரசச் சூழ்நிலை, சுப்ரமணியனருக்குப் பிடிக்கவில்லையோ, அல்லது குடியாத்தம்தான் தீர்ந்துவிட்டதே இன்னும் என்ன என்ற எண்ணமோ, குருநாதன் தூபமோ, யாதோ நாமறியோம்.

ஆனால் ஒன்றுமட்டும் கூறுவோம், நாடு நயவஞ்சகத்தைச் சகிக்காது!!

★



# தாயகம்
## அன்றும்—இன்றும்

இந்நாளில் தமிழ்நாடென வழங்கும் இச்சிறிய நிலப்பரப்புமட்டுந் தமிழ்நாடாகாது. சில்லாண்டுகட்கு முன்னரும் வடவேங்கடமுதல் குமரிவரை நிலைத்திருந்தது. இதுபோழ்து சேரநாடும், தெலுங்க நாடும் இதிற் படவில்லை. ஆனால், உண்மைத் தமிழ்நாடெது? தமிழ் நாடு விந்திய முதல் குமரிவரை இருந்ததாகவும், இந்துமகா கடல் ஓர் நிலப்பரப்பாய் இருந்ததாகவும், இப்பொழுதிருக்கும் இமயமலை நீர்ப்பரப்பாயிருந்ததாகவும், நாட்டு வரலாற்றின் வாயிலாக அறியக்கிடக்கிறது. குமரி என்பது தற்போது ஒரு முனைக்குப் பெயராக வழங்கி வரினும் ஈண்டு இம்முனையைக் குறிப்பதன்று. இது குமரியாற்றைச் சுட்டுகிறது. இந்த ஆற்றிற்கு அப்பாலும் பஃறுளியாறு என்றொரு ஆறு ஓடியதாகவும் அறியலாம். இதனை ‘தெனஅதுரு கெழு குமரியின் தெற்கும்’ என வரூஉம் புறநானூற்றாலும், ‘பஃறுளியாற்றுடன் பன்மலை அடுக்கத்துக் குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள’ என வரூஉஞ் சிலப்பதிகாரத்தாலும் அறியலாம். கடல் கோட்பட்ட லெமூரியா என்னும் நிலப்பரப்பே குமரிநாடாக இருக்க வேண்டும். எனவே நந்தமிழ்நாடு அந்நாளில் எவ்வளவுதூரம் பரவியிருந்தது? அந்தத் தமிழ்நாடெங்கே? அந்தத் தமிழ்நாடு இதுபோழ்து இச்சிறிய நிலப்பரப்பாயிற்று.

இந்நாடு தோன்றிய தன் காலத்தை ஆராயப் புகின், அது சரித்திர காலத்தையும் கடந்து நிற்கிறது. அவர்கள் பேசிவந்த மொழியாகிய தமிழே அவர்கள் தொன்மைக்குப் பெருஞ் சான்றுயுள்ளது. தமிழ்மொழியின் இயல் மிகவும் மென்மை வாய்ந்தது. மொழிகளின் இயல் நாளுக்கு நாள் வன்மை வாய்ந்ததாகவே உள்ளது. எனவே, மென்மை மொழி தொன்மையாகவே இருக்கவேண்டும். எனவே, இந்நாடு ஆயிர, ஆயிர ஆண்டுகட்கு முன்னரே தோன்றியிருத்தல் வேண்டும். இவ்வளவு தொன்மைவாய்ந்த தமிழ்நாட்டில் நாம் பிறந்தோமென்று நினைக்கும்போதே நம்மையறியாது உள்ளத்தில் இறுமாப்பெய்துகிறது.

இந்நாட்டினர் வெம்மையால் வதங்கி, வாடி விழ்வதுமில்லை; குளிரால் நடுக்கி வீழ்தலுமின்று. இவ்விரண்டிற்கும் பொதுவான நிலையையே உடையது. அதை அவர்கள் குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதமென நான்கு பிரிவாகப் பிரித்து பண்படுத்தி வதிந்தனர். வானளாவிய வரைகளையும், வான் பொய்ப்பினும் தான் பொய்யாத ஆறுகளையும் தன்னகத்தே கொண்டிருந்தது. அத்தமிழ்நாடெங்கே? கடல்கொள்ளப்பட்டது. அதை நினைக்கும்போதே அந்தோ! கை நடுங்குகிறது! கண்களில் நீரரும்புகிறது.

பிற நாட்டினர், சிறிதும் நாகரிகமின்றி காடுகளில் காட்டுமிராண்டிகளாகத் திரிந்த காலத்திற்கு முன்னரே நந்தமிழ் நாட்டினர் மிகுந்த நாகரிகத்துடன் வாழ்ந்தனர் என்பதைத் தொன்மை வாய்ந்த தொல்காப்பியத்தால் அறியலாம். இந்நாளிலிருப்பதுபோன்று சாதிப் பிரிவினை, சமயப் பிரிவினைகளின்றி அனைவரும் ஆன்மநேய ஒருமைப்பாட்டுடன் இயற்கையோடியைந்த இன்ப அன்புவாழ்வு நடத்தினர். இவர்கள் நாகரிகம் அந்நாளிலேயே பற்பல நாடுகளிலும் பரவியிருந்தது.

அந்நாளில், ஆண்களன்றிப் பெண்களும் கல்வியில் மேம்பட்டிருந்தனர். அந்நாளிற் பெண்கள் தமக்குத் தாமே வரனைத் தேடிக் கொள்ளும் வழக்கமிருந்தது. ஆண்களைப்போன்று அவர்கட்கும் உரிமையுண்டு. அவர்கள் அடிமை போல் வாழாது, வாழ்க்கைத்துணைகளாக வதிந்தனர். மண்டினி ஞாலத்து மழைவளந் தரூஉம் பிறர் நெஞ்சு புகாப் பெண்டிர் வாழ்ந்தனர்.

தமிழர்கள் அதுபோழ்து இறைவனைக் கந்தழி என்னும் பெயரால் வழுத்திவந்தனரெனத் தெரிகிறது. கந்தழி என்னும் சொல்லுக்குக் கட்டற்றதென்று பொருள். அஃதாவது: பொறையன்மை, வெகுளி, களவு முதலியவற்றால் கட்டற்றது எனப் பொருள்படும். அவர்கள் அறிவாய், அன்பாய் இன்பாயமைந்த இறைவனையே பரவினர். அந்நாளில் சாதிப் பிரிவினையே இல்லை. அவர்களிடையே ஆன்மநேய ஒருமைப்பாடு நிலவியிருந்தது.

ஓவியத்தைப்பற்றி விரிக்கப்புகின் வீண்புகழ்ச்சி ஆகும். எனினும், சிறிது கூறிவிட்டு மேற்செல்லுகிறேன். சோழநாட்டையே ஓவியக் களஞ்சியமெனக் கழறலாம். சோழநாட்டு ஆலயங்களே அன்னவரின் ஓவியத் திறனைத் தோற்றுவிக்கிறது. அவர்கள் ஓவியத்திற் சிறந்தவர்களென்று கூறுவதற்குத் தென்னாட்டு ஆலயங்களே சாலும்.

கல்வித்துறையைப்பற்றிக் கூற வேண்டுவதில்லை. தமிழ் மறையெனப்படும் வள்ளுவரின் குறளே அன்னவரின் கல்வி அறிவைக் கூறுகிறது. இந்நூலை எந்நாட்டவரேனும், எச்சமயத்தவரேனும் ஒப்புக்கொள்ளாதிருக்கவில்லை. அனைவரும் புகழும்படியன்றோ மிளிர்கின்றது. அதனாலன்றோ பாரதியும் ‘வள்ளுவன் தன்னை யுலகினுக்கே தந்து வான்புகழ்கொண்ட தமிழ்நாடு” என்று கூறிப் போந்தார். காதலின்பமும் அதன் வழிக் கட்டுரின்பமும் ஒன்றித் தேங்கும் அமிழ்தக் கடலாகிய சிலப்பதிகாரமும் கற்பகமாகிய மணிமேகலையும், தொல்காப்பியமும், புறநானூறும், அகநானூறும் தமிழரின் கல்வியறிவைப் புலப்படுத்துகின்றன. அந்நாட்டு மன்னர்கள் பாவலர்களை ஆதரித்துப் போற்றினர். ஆண் புலவரன்றிப் பெண் புலவர்களையுங் கொண்டிருந்தது.

இசைத்துறையிலும் மேம்பட்டிருந்தாரென்பதற்குக் கொடிய வேழத்தையும் மயக்கும் இனிய யாழொன்றே சாலும். அவர்கள் ஆயிரம் நரம்புகள் பூட்டிய யாழை இசைக்கும் ஆற்றல் வாய்ந்தவர்கள். அந்நாளில் ஆயிரக்கணக்கான இசைக்கருவிகள் இருந்ததாகவும் தெரிகிறது. அவைகள் எங்கே? பட்டன; பண்டைத் தமிழரின் இசைக்கருவிகளை அழிக்கவோ தமிழர்களாகிய நாம் பிறந்தோம். அவர்கள் பல்வகைப் பண்களறிந்திருந்தனர்.

அந்நாளில், மன்னர்கள், மறம் மடியவும், அறமோங்கவும் ஆண்டனர். மன்னுயிரைத் தன்னுயி

ரெனக் காத்தனர். புலவர்களையும் பாணர்களையும் ஆதரித்தனர். ஒரு நாட்டில், நாகரிகமோ அநாகரிகமோ அந்நாட்டு அரசியலைப் பொறுத்தது. எனவே, நாகரிகமுள்ள தமிழ்நாட்டையாண்ட மன்னர்கள் நீதி நெறி பிறழாது ஆண்டனர்.

"குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன் அடிதழீஇ நிற்குமுலகு" என்பது வள்ளுவர் திருவாக்கு. இன்றைய ஜனநாயகப் பல்லவி பாடும் ஓ தேசபக்தர்களே! இத் திருவாக்கைச் சிறிது உன்னுங்கள். ஜனநாயக அரசியல் முறையைத் திருவள்ளுவர் அன்றைக்கே முழக்கிவிட்டார். இம்முழக்கம் எதைக் காட்டுகிறது? அன்றை ஜனநாயக ஆட்சியைக் காட்டுகிறது. குடியாட்சியை விளக்கும் திருவள்ளுவர் வாக்கு எத்தகைய அழகுடையது பாருங்கள்! குடிதழீஇக் கோலோச்சு முறைதான் செங்கோன்மையெனப்படுவது. செங்கோன்மைக்கு மாறானது கொடுங்கோன்மை. இதுவரையும் செங்கோன்மை சிறப்பிக்கப்பட்டும் கொடுங்கோன்மை குறை கூறப்பட்டும் வருகிறது. அன்றைய குடிதழீஇக் கோலோச்சு முறையை வள்ளுவர் கண்கூடாகக் கண்டார். கண்டவற்றை எதிர்கால மக்களுக்கு எழுதிவைத்தும் சென்றார். எழுதிவைத்துச் சென்ற செங்கோலாட்சியை எவரிடம் கண்டார்? அன்று தன்னாட்சி செலுத்திய தண்டமிழ் மன்னர்பால் கண்டார். அம்மன்னர் எத்தகையவர்? குடிதழீஇக்கோலோச்சும் மாண்பினர். அம்மாண்புடைய மன்னர்களின் அரசாளு முறையை ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்ற அவைக்களத்தின் பெயரால் நன்கறியலாம். அரசன் ஐம்பெருங்குழுவோடும் எண்பேராயத்தோடும் உடனிருந்தே மக்கள் விரும்பும் நற்காரியங்களைச் செய்துவந்தான். அரசன் அரசாளுமுறையை நன்கு தெரிந்தானென்பதைக் கீழ்வரும் பாக்களால் உணரலாம்,

"கால்பார்கோத்து ஞாலத்தி
யங்கும்
காவற் சாகாடுகைப் போன்
மாணின்
ஊறின்றாகி யாறினிது படுமே
உய்த்தல் தேற்றானாயின்
வைகலும்
பகைக்கூழள்ளற்பட்டு
மிகப் பஃறி நோய்தலைத்
தலைவருமே."

இப்பாட்டு பண்டைநாட் காஞ்சியிலுறைந்த தொண்டைமான் இளந்திரையன் என்பவனால் பாடப்பட்டது. இச்செய்யுள் நாட்டை ஆளும் முறை கூறும் வகையில் வண்டியைச் செலுத்தும் நிகழ்ச்சியை வெளிப்படுத்துகிறது. இப்பாட்டின் கருத்தென்னவெனில் "உருளையையும் பாரையும் கோர்த்துச் செலுத்தப்படும் வண்டியைத் தெரிந்தவனும் திறமுடையவனுமான ஒருவன் செலுத்தவேண்டும். அவ்வாறின்றி அறியாதவனும் திறமில்லாதவனுமான ஒருவன்செலுத்திக்கொண்டு போனால் அவ்வண்டி நொடியிலும் சேற்றிலும் பதிந்து பலவித இன்னல்களுக்குள்ளாகும்" என்பதாம். இதுபோலவே அரசியலை நடத்திச்செல்லுமரசன் அறிவும் திறமையுமுடையனாக இருத்தல் வேண்டும். அவையில்லாதவனால் நடத்தப்படும் ஆட்சி பலவித துன்பங்களுக்கு ஆளாகும் என்பதாம். இக்கூற்று ஒரு அரசன் வாக்கென்று கூறும்பொழுது அவன் அரசின் தன்மையை, ஆளும் தன்மையை எவ்வளவு நுணுக்கமாக ஆய்ந்திருக்கிறான் என்பதும் ஆய்ந்தபடியே ஆண்டும் இருக்கிறான் என்பதும் தெளிவாகிறதன்றோ?

இன்னும் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன் என்பவன் தமிழ்நாட்டை அரசாண்டவன்; மன்னுயிர்த்தே மலர்தலையுலகம் என்ற பெருநெறியின்படி செங்கோல் செலுத்தியவன். இத்தகைய அரசனை அவனது பகையரசர் சிலர் பழித்துரைத்துவிட்டனர். அது கண்ட பாண்டியன் அவலெலனக் கனன்றான். தனதாட்சியைக் குறைகூறிய பகைஞர்களை அடிப்படுத்தக் கருதினான். அக்கருத்தை யுணர்ந்த சிலர், அது கைகூடாதென்றனர். அங்ஙனம் கூறியவர்களிடம் அரசன் சூளுரைத்தான் அச்சூளுரையாவது:-

"சிறு சொற் சொல்லிய
சினங்கெழு வேந்தரை
யருஞ்சமஞ் சிதையத் தாக்கி
முரசோடு
ஒருங்ககப்படேனாயிற்
பொருந்திய
வென்னிழல் வாழ்நர் சென்
னிழற் காணாது
கொடியனெம் இறையெனக்
கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே
னாகுக" என்பதாம்.

என்னைப் பற்றி இழித்துக் கூறிய வேந்தரை போர் முனையிலே தாக்கி, அவர்களுடைய முரசத்தோடு அவர்களை அடிப்படுத்தாவிட்டால் எனது அரசியலிலே வாழ்பவர்கள் ஒதுங்குமிடமில்லாதவர்களாய் என்னுடைய அரசன் கொடியவனென்று கூறி வருந்தும் கண்ணீருடனே எனது குடிகள் என்மீது பழி தூற்றும் கொடுங்கோலரசனாக யான்" என்கிறான். இதனால் பாண்டியன் தனது ஆட்சி முறையை யாரும் குறை கூற முடியாத வகையில் நடத்திக்கொண்டுபோகும் மானமுடையவனென்பதும் அங்ஙனமே நடத்தி வந்தானென்பதும் நம்மனோர் சிந்திக்கற்பாலதாகும். இன்னும் நரை தோன்றாக் கிழப் புலவரொருவர் தமக்கு நரை தோன்றாமலிருப்பதற்குரிய இன்பச் செய்திகளைக் கூறுமிடத்து எனது நாட்டு வேந்தனும் அல்லவை செய்யான் காக்கும் என்கின்றார். அதாவது அரசன் தமது நாட்டில் மக்கள் எல்லோரும் இன்பமாக வாழ அரசு புரிகின்றான் என்பதாம். ஆகவே அன்றைத் தமிழ் மன்னர் ஆட்சி எத்தகைய அமைதியுடனும் இன்பத்துடனும் நடந்து வந்துள்ளதென்பதை ஒருவாறு உணரலாகும். ஆனால் இன்று நமது தமிழ் நாட்டில் நடைபெறும் ஆட்சி எத்தகையது? ஜனநாயக ஆட்சியா? அல்லது சர்வாதிகார ஆட்சியா? ஜனநாயக ஆட்சியெனில் மக்கள் அமைதியாக வன்றோ வாழ்வார்கள்? இன்று நம் தமிழ் நாடு அமைதியாக விருக்கிறதா?

தமிழர்கள் "திரைகடலோடியும் திரவியந் தேடு" என்றபடி, பாபிலோன், எகிப்து, உரோம், கிரீசு, சிரியா முதலிய நாட்டாருடன் வாணிபம் புரிந்தனர். இந்நாட்டுத் தேக்கு, சந்தனம், யானைத்தந்தம், மயிற்றோகை, மிளகு, ஏலம் முதலியன பிறநாட்டிற்குச் சென்றன. இஃதன்றி, மருத்துவம், வானூராய்ச்சி முதலிய துறைகளிலும் மேம்பட்டுத் திகழ்ந்தனர்.

இத்தகைய பெற்றிவாய்ந்த தமிழ்நாடு இப்பொழுது எந்நிலையிலுள்ளது? சாதிப் பிரிவினையாலும், சமயப் பிரிவினையாலும் பிளவுபட்டுள்ளது. பிளவுபட்டிருக்கும் தமிழினத்தை ஒருமைப்படுத்த தமிழ்மொழியையன்றி வேறொன்றிருப்பதாகத் தெரியவில்லை. சாதியாலும், சமயத்தாலும் ஒருமைப்படாத தமி



ழர்கள், தமிழ்மொழியால் ஒருமைப்படுவரென்பது திண்ணம். அத்தகைய தமிழ்மொழியின் நிலை என்ன? அதுபற்றி பல மொழிகளிடையே குப்பையிலுள்ள ஆலமுளைபோலும் வைக்கோற்போரிலுள்ள தீக்கங்கு போலுமுள்ளது. சோற்றுக்கொரு மொழியும், நாட்டுக்கொரு மொழியும் உள்ள நிலைமையில், தமிழ் எங்ஙனம் வளர்தல் கூடும்?

பேச்சு வழக்கிலும் தமிழ் குறைந்திருப்பது கண்கூடு. கருத்திற்கிசைந்தவன் எனப் பொருள் பொதிந்த இனிய தமிழ்ச்சொல்லாகிய 'கணவன்' என்னுஞ் சொல்லை வழங்குகின்றனரா? இல்லை சேரிப் பெண்ணும் 'புருசன்' என்று கொச்சையாகப் பேசுகின்றாள். 'சோறு' என்று கூறுவது நாகரிகமில்லையாம். 'சாதம்' என்னும், வடமொழியை வழங்கினால் நாகரிகமாம். என்ன மதியீனம்? 'நீர்' என்று கூறுங் குடியானவர்களும் பட்டினங்களிற் செல்லும்போது சிற்றுண்டிச் சாலையில் 'சலம் போடு' என்று கூறுகின்றனர்.

தமிழர்காள்! தாய்மொழிப் பற்றின்றி எந் நாட்டினரேனும் மேன்மையுற்றனரோ? தாய் மொழிப் பற்றே தாய்நாட்டுப் பற்றென்றறிமின். தமிழனின் தாழ்ந்த நிலைமை உணர்ந்தன்றே அன்றே பாரதியார் கதறினர். அதனைச் செவிமடுத்தனரா? போனதுபோக அனை வரும் கூடுமின்; தூயிலுதலொழிமின்; தமிழ் நிலை விழிகொண்டு காண்மின். சலியாதுழைமின். பிறநாட்டு நல்லறிஞர் நூற்களை தமிழ் மொழியிற்பெயருமின். இறவாத புதுநூல்கள் தமிழ்மொழியிலியற்றுமின். தெருவெலாந் தமிழ் முழக்கஞ் செய்மின். ★

# பெரியார் மனப்பாங்கு

★

★ **பெரியார், பார்ப்பனரிடத்தில் துவேஷம் கொண்டவரல்ல.**

**தனிப்பட்ட பார்ப்பனரிடத்தில் குரோதம் கொண்டவரல்ல.**

**பார்ப்பனீயம் எனும் முறையைத் தான் கண்டித்து வந்திருக்கிறார்.**

**பார்ப்பனீயம் எனும் முறையை ஒழித்தாகவேண்டும் என்பதே அவருடைய இலட்சியம்.**

**பார்ப்பனீயம், பார்ப்பனரல்லாதாரிடம் குடிபுகுந்து ஆட்டிப் படைப்பதையும் அவர் அஞ்சாநெஞ்சுடன் கண்டிப்பவர்.**

எனினும்,

பார்ப்பனச் சமூகம், பெரியாரின் இயக்கத்தை ஒழித்துக்கட்ட முனைவது கண்டும்,

பத்திரிகைத் துறையிலும் பொதுவாழ்வுத் துறையிலும் கிடைத்த செல்வாக்கைக்கொண்டு பெரியாரின் ஒவ்வொரு முயற்சியையும் குலைத்திட, பல பார்ப்பனர்கள் ஆத்திரத்தால் அறிவிழந்து வேலை செய்தது கண்டும், பெரியார், இன்று, பார்ப்பானே வெளியேறு என்று முழக்கமிடுகிறார்.

ஏன் பெரியார், இப்படி ஒரு துவேஷ இயக்கம் நடத்தவேண்டும் என்று, ஏதுமறியாதார்போலப் பேசும் பார்ப்பனத் தோழர்கள், எப்படி எப்படிச் சமரசம் பேசி வந்தார் பெரியார் என்பதை உணரவேண்டும்—தங்கள் போக்கைத் திருத்திக் கொள்ளவேண்டும்.

இதோ, பெரியார் பேச்சில் ஒரு பகுதி, படித்துப் பார்க்க:-

"நான், பார்ப்பனீய சமயம், கொள்கை, வாழ்க்கைமுறை ஆகியவைகளைப்பற்றியே குறை கூறி வருகிறேன். அதுவே, எனது நெடுநாளைய கொள்கையுமாகும். அதை நான் இதுவரை மாற்றிக்கொண்டதுமில்லை; பலனடையும் வரை இனி மாற்றப்போவதுமில்லை. எதுவரை என்றால், அவர்களால் நமக்குக் கொடுமையில்லை, துன்பமில்லை, இருவரும் சமம் என்றாகும்வரை. ஆனால், பார்ப்பனர்களில் தனிப்பட்ட எவரிடத்திலும் எனக்கு எவ்வித விரோதபாவமுமில்லை. அப்படி இருப்பது தப்பிதம். எனவே, எதிரிகளை தனிப்பட்ட முறையில் நாம் யார்மீதும் குறைகூறவேண்டாம்.

ஆனால், பார்ப்பனர்களோ யார் என்ன செய்தாலும், இது இராமசாமி வேலை, அந்த அயோக்கியன் தூண்டிவிட்டிருக்கிறான் என்று கூறுவதோடு இராமசாமியை அழிக்க எவ்வளவு இழிவான வேலையும் செய்கிறார்கள்.

இதற்கு உதாரணம் கூறுகிறேன். பத்து வருடங்களுக்குமுன்பு நானும் தோழர் கண்ணப்பரும் மதுரைக்கு ரயிலில் சென்றுகொண்டிருந்தோம். நான் கண்ணப்பரிடம், ஈரோட்டில் நடைபெற்ற ஒரு கூட்டத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். பக்கத்திலிருந்த ஒரு ஐயர், 200 ரூபாய்க்குமேல் சம்பளம் வாங்கும் இன்ஷ்யூரன்ஸ் ஆபீசர் எங்கள் பேச்சிடையே புகுந்து சிறிது கிண்டலாகப் பேசினார். அவருடன் கண்ணப்பர் சிறிது கோபமாகப் பேசினார். நான் கண்ணப்பரைத் தடுத்து, "அந்த ஐயருடன் சமாதானமாகப் பேசி நியாயங்களை எடுத்துச் சொல்லக்கூடாதா? நீயும் ஏன் அவர்போல் ஆத்திரப்படுகிறாய்?" என்றேன். அந்த ஐயர் கண்ணப்பரைக் காட்டி "இவர் ஈரோட்டு இராமசாமி நாயக்கன் இருக்கிறானே அவனுடைய கூட்டத்தைச் சேர்ந்தவர்; அவனுடைய சிஷ்யப்பிள்ளை; அதனால் தான் வேகமாகப் பேசுகிறார்" என்று என்னிடம் கூறினார். என்னை அறிந்த பக்கத்திலிருந்த சிலர் சிரித்தனர். நான் ஒன்றும் சொல்லவில்லை. அவரும் பேசாதிருந்துவிட்டார். பின்பு கண்ணப்பர் வேறு வண்டிக்குப் போனார், நான் கக்கூசு அறைக்குச் சென்றேன். அப்போது பக்கத்திலிருந்தவரால் நான்தான் இராமசாமி எனத் தெரிந்த அவர் உடனே என்னை வந்து வணங்கி, 'மன்னிக்கவும், நீங்கள் இவ்வளவு நல்லவர் என்று நினைக்கவில்லை. உங்களைப்பற்றி, நீங்கள் பெரிய பார்ப்பனத் துவேஷி என்றும், ரொம்பக் கெட்டவர் என்றும் பார்ப்பனர்கள் பேசிக்கொள்வதைக் கேட்டு, அதை நம்பி, இப்படிக் கூறிவிட்டேன்' என்று வருந்தினார். நான் சமாதானம் சொல்லி நன்றி தெரிவித்தேன்."

★

## திருமணம்

12-9-54ல் காஞ்சியில் தி. மு. க. தோழர் ஏகாம்பரம், தோழியர் அஞ்சலையை வாழ்க்கைத்துணையாக ஏற்றார். மண விழாவிற்கு தோழர் கே. டி. எஸ். மணி தலைமை வகித்தார். தோழர் டி. சி. கருப்பண்ணன் அவர்கள் சொற்பொழிவாற்றினார்.

திராவிடநாடு

காஞ்சி] 19—9—54 [ஞாயிறு

# நேருவின் உபதேசம்!

★

அறிந்தோ அறியாமலோ, அவசரப் புத்தியாலோ ஆத்திரத்தாலோ, மமதையாலோ மாச்சரியத்தாலோ, சிலகாலமாகவே, நம்மை (திராவிட இயக்கத்தினரை) வகுப்புவாதிகள் என்று கூறிக்கொள்வதில் சிலருக்கு அளவுகடந்த ஆசை. நம்மை வகுப்புவாதிகள் என்று கூறி முடிவுகட்டிவிட்டால், நாமும் நம்முடைய இயக்கமும் நாட்டில் தலைகாட்டமுடியாது. என்பது அவர்கள் நினைப்பு. இது, காலப்போக்கினைக் கணக்கிட்டறியமுடியாத கருத்தழிந்தவர்களின் 'ஆருடம்'.

ஆனல், உண்மையாக வகுப்புவாதிகள் யார்? உண்மையான வகுப்புவாதம் எது? அது எங்கே ஊற்றெடுக்கிறது? எந்த இடத்தை உறைவிடமாகக்கொண்டுள்ளது? அது எப்படி வளர்கிறது? ஏன் வளர்க்கப்படுகிறது? என்பனபோன்ற உண்மைகளை ஆராய்ந்தறியும் வாய்ப்பைப் பெற்றேருக்கன்றி, மற்றவர்களுக்கு அதன் உண்மை எளிதில் புலப்படாது. புலப்பட்டாலும், புத்தியில் தெளிவில்லாதார்க்கு விளக்கம் ஏற்படாது. ஏற்பட்டாலும், அந்த உண்மையை மற்றவர்களுக்கும் எடுத்துரைக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாவதில்லை. இந்த நல்லெண்ணம் மற்றவர்களுக்கு உண்டாவதைவிட, நாட்டின் நாயகர்களுக்கு உண்டாகிவிட்டால், 'வகுப்புவாதம்' என்ற சொற்றெடரை அகராதியிலிருந்தே எடுத்துவிடலாம். நாடாள வந்துள்ளவர்களுக்கு அந்த நல்ல காரியத்தைச் செய்யவேண்டுமென்பதில் சிந்தனைத் தெளிவு ஏற்பட்டுவிட்டால், வகுப்புவாதம்போன்ற நாட்டுக்குத் தேவைப்படாத—பயனற்ற பித்தலாட்டங்கள் மக்கள் மத்தியில் நடமாடி நாசம் விளைவிக்கும் கொடுமை இல்லாதொழியும் என்பது எமது அசைக்கமுடியாத நம்பிக்கையாகும்.

நாட்டுக்குத் தேவைப்படும் ஒவ்வொரு சீர்திருத்தத்திற்காகவும் செய்யப்படும் பிரச்சாரம், அரசியல் வானை எட்டிப் பார்க்கும்வாய்ப்பு ஏற்பட்டவுடன், அது சட்டமாக்கப்பட்டு, நடைமுறைக்கு வந்துவிடுகிறதென்பது கண்கூடாகக் காணும் உண்மையாகும்.

நீண்டகாலமாகவே, நாம், (திராவிட இயக்கத்தினர்) வகுப்புவாதம் நாட்டில் இல்லாதொழியவேண்டுமென்று பிரச்சாரம் செய்துவருகிறேம். வகுப்புவாதத்தின் ஆணிவேர் எங்கே பதிந்துகிடக்கிறதென்பதை ஆதாரத்துடன் விளக்கியும் வருகிறேம். இந்த விளக்கத்தை, நாம் நாட்டவர்க்கு எடுத்துரைக்கும்போதுதான், நம்மைச் சிலர் வகுப்புவாதிகள் என்று நாக்கூசாது கூற முற்பட்டுவிடுகின்றனர். அப்படிப்பட்ட அநாமதேயங்களுக்கெல்லாம் 'உண்மை அதுவல்ல, இதுதான்'' என்று எடுத்துரைக்கும் முறையில், பத்திரிகைகளில் ஒரு செய்தி வெளியாகி இருக்கிறது.

இப்போது, டில்லி சட்டசபையில், விசேஷ விவாக மசோதாபற்றிய விவாதங்கள் நடைபெற்றுக்கொண்டிருக்கின்றன. 14-9-54 அன்று நடைபெற்ற மேற்படி விவாதத்தில் கலந்துகொண்ட நேரு பண்டிதர், சில பல உண்மைகளை வெளியிட்டிருக்கிருர்.

அதாவது, நாம் பலகாலமாகவே கூறிவரும் ஒரு உண்மையை நேரு பண்டிதர்—டில்லி முதல்வர் ஒப்புக்கொண்டு, அதற்கு விளக்கமும் தந்திருக்கிருர்.

ஒருவர் இன்னெருவர்மீது சுமத்துகின்ற உண்மையான குற்றச்சாட்டுகளுக்கே, கருத்துத் தெளிவற்றவர்கள் வகுப்புவாதம் என்ற பெயரைச் சூட்டுவது வழக்கமாக இருந்துவருகிறது. அதாவது, ஒருவர் செய்கின்ற அக்ரமத்தை, இன்னெருவர் எடுத்துக் காட்டி, அந்த அக்ரமம் ஒழியவேண்டுமென்று கூறினல், அப்படிக் கூறுபவர் வகுப்புவாதியாகவும், கூறப்படும் விஷயம் வகுப்புவாதமாகவும் கருதப்படுகிறதல்லவா? அந்தப் பெரிய தவறைச் சாட்டியிருக்கிருர், நேரு பண்டிதர். உண்மையான வகுப்புவாதம் எங்கே இருக்கிறதென்பதை ஒளிவு மறைவின்றி எடுத்துக் கூறிவிட்டார். அதற்காக நமது நன்றி அவருக்கு. "முதலில் ஹிந்து சமூகத்திலுள்ள சாதி வேறுபாடுகளையும், பிறகு, ஹிந்துக்கள், முஸ்லீம்கள், கிறிஸ்தவர்கள், பார்சிகள், புத்தர்கள், சமணர்கள் ஆகியவர்களிடையே உள்ள வேறுபாடுகளையும் நீக்காவிடில், நாம் ஏற்படுத்த விரும்பும் தேசிய ஐக்கியம் சாத்தியமல்ல. இந்தச் சாதி வேறுபாடுகளே வகுப்புவாதமாகும்'' என்று தெளிவான விளக்கம் தந்திருக்கிருர்.

''நாங்கள் உயர்ந்தவர்கள், நீங்கள் தாழ்ந்தவர்கள், எனவே, நாங்கள் இட்ட பணியை நீங்கள் செய்தாக வேண்டும்'' என்று கூறிக்கொள்ளும் ஒரு குறிப்பிட்ட சிலர், பலராகவுள்ள இந்நாட்டின் பழங்குடி மக்களை ஏய்த்துப் பிழைப்பதை நாம் கண்டிக்கும் போது, நமக்கு வகுப்புவாதிகள் என்ற பட்டம் சூட்டப்படுகிறது. இதோ, நாட்டின் நாயகர் நவில்கிருர், சாதி வேறுபாடுகளே வகுப்புவாதமென்றும் இது ஒழிக்கப்படாவிட்டால் நாட்டின்

ஒற்றுமை நசித்துவிடும் என்பதாக! இதனையேதான் நாமும் கூறிவருகிறேம். பிறப்பினல் ஒத்த நிலையிலுள்ள மக்களிடையே உயர்வு தாழ்வுகளைக் கற்பித்து, அதனை முதலாக வைத்துக்கொண்டு, ஒரு சிலர் வயிறு வளர்க்கும் முறை, இந்நாட்டில் இருக்கும்வரையில், நாட்டில் எந்தவிதமான முன்னேற்றத்தையும் காண முடியாது—அடையமுடியாது.

நேரு பண்டிதர் சிறிது தைரியத்துடனேயே கூறியிருக்கிருர், முதலில் ஹிந்துமதம், பிறகுதான் மற்ற மதங்கள் என்பதாக! இந்து மதத்திலுள்ள சாதிக் கொடுமையை அவரும் ஓரளவுக்கு நம்மைப்போல் உணர்ந்திருப்பதாலேயே முதலில் ஹிந்துமதம் என்று வலியுறுத்திக் கூறியுள்ளார். நம்மை நாத்தழும்பேற நிந்திக்கும் நிலை பெற்றேர் நேரு பண்டிதரின் இந்த உபதேசத்தை நெஞ்சில் பதியவைத்துக் கொள்ளவேண்டுமென்று விரும்புகிறேம்.

நாட்டின் ஒற்றுமையை நாசமாக்கும் நஞ்சை எடுத்தெறியப் பாடுபடும் நாம் வகுப்புவாதிகளா? அல்லது நாட்டின் ஒற்றுமையைக் குலைக்கும் சாதி வெறியர்கள் வகுப்புவாதிகளா என்பதனை எண்ணிப் பார்க்கும் தெளிவு இனிமேலாவது நம்மை நிந்திக்கும் 'நல்லவர்களுக்கு' ஏற்படவேண்டுமென்பதே நமது விருப்பம். நேரு பண்டிதரின் உபதேசம் இதற்குப் பயன்படட்டும்.

''சமுகம் மாறியிருக்கிறதென்பதை ஒப்புக்கொண்டபின், முன்பு நல்லதாக இருந்து பின்னர் பொருத்தமற்றதாகிவிட்ட ஒரு குறிப்பிட்ட சமுக அமைப்புடன், அந்தச் சமுகத்தைப் பிணைத்துவைப்பது விவேகமல்ல.

ஒவ்வொரு சமுக ஸ்தாபனமும் அதனதன் சொந்தத் திறமைக்கு ஏற்ப வளரவேண்டுமென்பதையும், அதன்மீது வேறு வழிகளை நிரப்பந்தமாகத் திணிக்கக்கூடாது என்பதையும் நான் ஒப்புக்கொள்கிறேன்''

இதுவும் பண்டிதரின் பக்குவமான உபதேசம்தான். நாம் பலகாலமாகவே கூறிவருகின்ற ஒரு சிறந்த உண்மையைத்தான் பண்டிதரும் கூறியிருக்கிருர். அறிந்தோ அறியாமலோ, ஒரு சமூகம் ஒரு காலத்தில் ஏதாவதொரு பழக்கவழக்கத்துக்கு ஆளாகியிருந்து, காலப்போக்கும் கருத்துத் தெளிவும் அந்தப் பழக்கத்தை விட்டொழிக்கும்படி செய்யும் சந்தர்ப்பம் ஏற்படும்போது, ''ஆகா, வந்தது ஆபத்து! அந்தக் காலத்துப் பழக்க வழக்கங்களை விடுவதா? அடுக்குமா இது! அநியாயம்! அநியாயம்!!'' என்று அலறி ஆர்ப்பரிப்பவர்கள் மத்தியில் நின்றுகொண்டு கூறிவந்த ஒரு உண்



மையை, நேரு பண்டிதர் இப்போது கூறுகிருர்—மகிழ்ச்சி, நன்றி! இந்த நல்லெண்ணம் அவரிடத்தில் நிலைத்து நிற்கவேண்டுமென்பதில் நாம் பெரிதும் ஆவல்கொண்டவர்களாக இருக்கிறேம். காரணம்: மாறிவரும் ஒரு சமுக அமைப்பை, மாறவிடாமல் தடுக்கும் சக்திகள் எதுவாயினும், அவற்றைச் சாடி முறியடிக்கவேண்டுமென்பதில் முழு அக்கரைகொண்டுள்ள நாம், நேரு பண்டிதர் போன்ற நாட்டின் நாயகர்களுக்கு உண்டாகும் இப்படிப்பட்ட முற்போக்குக் கருத்துக்கள் முழு வெற்றிபெற வேண்டுமென்றே விரும்புவோம். மாறிவரும் சமுகம்—மாறவேண்டிய சமுகம் — மாறும் விருப்பத்தோடுள்ள சமுகம் — மாற முடியாமல் வேதனைப்பட்டுக்கொண்டிருக்கும் சமுகம் முதலான எல்லாச் சமுகங்களும் பழைமைப் பிடியிலிருந்து விடுபட்டு "நீ வேறு, நான் வேறு'' என்ற பேத நிலை ஒழிந்து, மக்களினம் முழுவதும் சரி நிகர் சமானம் என்ற நிலை பெறவேண்டுமென்பதில் கருத்துடைய எவரும் நேருவின் இந்த உபதேசத்தை ஏற்க மறுக்கமாட்டார்கள். ஆனல் சாதிவெறியர்களுக்கும், மதப் பித்தர்களுக்கும் நேரு பண்டிதரின் இந்த உபதேசம் உள்ளத்தை உலுக்குவதாகத்தானிருக்கும். சமுகத்திலுள்ள சளக்குகள் மாறி நல்ல நிலை ஏற்பட்டால் உலகமே இருண்டுவிடும் என்று நினைக்கும் போக்கினருக்கு நேரு அவர்களின் உபதேசம் நெருப்பாகத்தான் தோன்றும்.

ஒரு சமூகம் இன்னெரு சமுகத்தின் மீது படையெடுப்பதையும் பண்டிதர் கண்டிக்கிருர். ஒரு சமுகத்தினுடைய பழக்க வழக்கங்களை இன்னெரு சமுகத்தின் மீது பலவந்தமாகத் திணிப்பதை அவர் பலமாகக் கண்டிக்கிருர். தனிப்பட்ட முறையிலோ அல்லது ஒரு குறிப்பிட்ட மேடைப் பிரசங்கத்திலோ இதனை அவர் கூறவில்லை. நாட்டின் பிரதிநிதிகள்—மக்கள் நலனில் நாட்டங்கொண்டவர்கள் கூடி நாட்டுக்குத் தேவையான நல்ல திட்டங்களை வகுக்கும் இடமான சட்ட சபையிலேதான் இந்த உபதேசங்களை நாட்டின் நாயகர்—நேரு பண்டிதர் கூறியிருக்கிருர், நாடு ஏற்கவேண்டுமென்ற நல்லெண்ணத்தோடுதான் அவர் இதனைக் கூறியிருக்கிருர் என்று நாம் நினைக்கிறேம். ஆனல், அவருடைய மனச்சாட்சி அதனை உண்மையாகவே ஏற்றுக்கொண்டு அவரை அவ்விதம் கூறச் செய்ததா என்ற பகுதியில் இப்போது ஆராய்ந்து உண்மை காணுவதற்கில்லை. அது பொறுத்திருந்து பார்க்கவேண்டிய ஒன்றாகும். சந்தர்ப்பங்களும் சூழ் நிலைகளும் நிர்ப்பந்தப் படுத்தும்போது சிலர் உண்மையை ஒப்புக்கொண்டு தீர வேண்டிய கட்டாயத்துக்கு, ஆளாகி விடுகின்றனர். இதில் பண்டித நேரு அவர்கள் விலக்கா என்ன? பொறுத்திருந்து பார்த்தால் உபதேசம் அவருக்கா அவனிக்கா என்பது புரிந்துவிடும். ★

## சோவியத் சோபிதத்தைச் சொல்கிருர் - பார்த்தவர்!

★ சுத்தானந்த பாரதியார், ரஷியா சென்று கண்டவற்றை எடுத்துக் கூறி வருகிருர்.

தினமணி சுடர் தரும் கட்டுரையில் சில பகுதிகளை இங்கே காணலாம். சோவியத் சோபிதத்தைச் சொல்கிருர் பார்த்தவர்.

இது குறித்துப் படித்தவர்களும் சொல்கிருர்கள்—புகழ்ந்துதான்.

அங்கு போகாதவர்களோ, அது ஒரு சிறைக்கூடம்—பஞ்சக் கிடங்கு—பயங்கர பூமி என்று பேசுகிருர்கள்.

போய்வந்தவர்கள் கூறுவது, போகாதவர்கள் கூறுவதைவிட, மேலான தல்லவா!! ஆகவே, இதை வெளியிடுகிறேம்.

"நான் ரஷ்யாவைப் பார்த்துத் திரும்பிய பிறகு பொதுவிலும் ரேடியோவிலும் பல கூட்டங்களிலும்பேசினேன். "பெரிய இடங்களைக் காட்டி ஆளை மயக்கியிருக்கிருர்கள். அந்த மயக்கத்தில் அவர் விழுந்துவிடுகிருர்'' என்றனர்.

அரசியல் வாழ்வில் எத்தனையோ ஒற்றரை நான் பார்த்திருக்கிறேன். ஆதலால் ஒற்றரும் என்னை ஏமாற்ற முடியாது. நான் இரண்டு கண்களையும் திறந்துகொண்டுதான் ரஷ்யாவின் எல்லை முடுக்கெல்லாம் சுற்றிப் பார்த்தேன்.

ஒரு மாளிகைக்குள் சென்றால், அதற்குரியவர்கள் துணைகொண்டுதான் சுற்றிப்பார்க்க முடியும். நாம் திடீரென்று நினைத்த இடத்திற்குச் செல்ல முடியாது. போனலும் நமக்கு வழிதுறை தெரியாது. காலம் வீணுகும். பணம் வீணுகும். உத்தரவில்லாமல் ரஷ்யாவில் எதையும் பார்க்கமுடியாது. எந்த நாட்டிலேதான் பார்த்துவிடமுடியும்? உத்தரவில்லாமல் நமது டில்லி பார்லிமெண்டு கட்டடத்திலோ ராஜாங்கத்திலோ நுழைய முடியுமா? அவ்வளவு பெரிய சக்தி பெற்ற நாட்டில் உத்தரவு பெற்றுத்தான் எதையும் பார்க்கமுடியும். இது திறமையான ஆட்சி முறையையே குறிக்கிறது.

நாங்கள் வந்ததும் அரசாங்கத் தலைவர்கள் நல்வரவு தந்து தக்க அதிகாரிகளை எங்களிடம் அனுப்பி உங்களுக்கு என்னென்ன பார்க்க வேண்டும் குறித்துத் தாருங்கள் என்றனர். நாங்கள் குறித்துக் கொடுத்தோம்.

என் சம்பந்தப்பட்டவரையில் நான் நாள் முழுவதும் வட்டமிட்டு வட்டமிட்டு என்னால் இயன்றதெல்லாம் பார்த்தேன். பார்த்த அளவில் நான் சொல்வதெல்லாம் உண்மைதான்.

எனது துணைவர் உதவியில்லாமலே இரவு நேரத்தில் நன்னன் தனியே தெருத் தெருவாகச் சுற்றி அந்த அளகாபுரியை நோட்டம் பார்த்தேன். இரவில் யாரும் ஜோடி நடமாடவில்லை, குடி, வெறியில் ஆபாசமாக நடக்கவில்லை. பதினெரு மணிக்கெல்லாம் நகரம் ஓய்வு கொண்டுறங்கியது. காலையில் எல்லாரும் எட்டுமணிக்கு வேலைக்குப் போகவேண்டும்.

நான் மாளிகைகளை மட்டும் பார்த்து மயங்கவில்லை. கிராமங்களுக்கும் சென்று சிறு குடில்களையும் கண்டேன். ஆனல் நான் திரும்பிய திசை யெதிலும் வறுமையில்லை. பிச்சைக்காரரில்லை, சண்டையில்லை, வறட்சியில்லை. நாடெல்லாம் செழித்துத் தழைத்து மகிழ்ச்சி பொங்கித் ததும்பியதைக் கண்டேன். ★

## நன்றி

எங்கள் மணவிழாவுக்கு வந்து பரிசுகள் வழங்கியும் வாழ்த்துரைகள் அளித்தும் சிறப்பித்த நண்பர்களுக்கும், வாழ்த்துத் தந்திகளும் கடிதங்களும் அனுப்பி பாராட்டுதல்களைத் தெரிவித்த கழகத் தோழர்களுக்கும் எங்களுடைய வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேம். தனித்தனியே எழுத முடியாத நிலைமைக்கு மன்னிக்க வேண்டுகிறேம்.

அரங்கண்ணல்
ஆண்டாள்

# செயின்ட் ஜார்ஜ் கோட்டை

[2]

1672ல் எலிஹுயேல் என்ற கம்பெனிச் சிப்பந்தியும், சிலரும் வேதக் கோயில் ஒன்று அமைக்கத் திட்டமிட்டனர். அப்பொழுது ஸ்ட்ரேன்ஹாம் மாஸ்டர் என்பவர் கவர்னராய் இருந்தார். திட்டம் நல்லதுதான். ஆனால் லாபகரமாயிருக்காத இந்தச் செலவினத்திற்கு இங்கிலாந்திலுள்ள கம்பெனி டைரக்டர்கள் அனுமதியளிப்பார்களா என யோசித்தார் அவர், கடைசியாக அனுமதி கேட்டு இல்லையென்று ஆனபின்பு, உத்தரவை மீறுவதைவிட, உத்தரவு பெறுமலே காரியத்தை முடித்துவிடுவது என நிச்சயித்தார். நன்கொடை வசூலித்து, அர்ச். மேரி ஆலயத்தை அமைத்தார்கள். ஆலயம் அமைந்து முடிய இரண்டு வருடங்கள் ஆயின. ஆசியாவிலேயே புராதனமான வேதக் கோயில் இந்த மாதா கோயில்தானும்.

1710ல் வீடுகளின் எண்ணிக்கை மேலும் அதிகமாயிற்று. உட்புறத்தில் ஒரு சிறு நகரமே ஸ்தாபிதமாகிவிட்டது. 1710 முதல் 1746 வரை வர்த்தகம் உச்ச நிலையில் நடைபெற்றுக்கொண்டிருந்தது. இடையிடையே போட்டி, பொருமை காரணமாக எழுந்த பூசல்கள், ஆரம்ப காலத்தில் தங்களுக்குள் சண்டையிட்ட ஹிந்து ராஜாக்கள், அதன்பின் வடக்கிலிருந்து வந்த மகமத்தியர்கள் இவர்களுடன் ஏதாவது ஒரு கட்சியுடன் சேர்ந்ததால் ஏற்பட்ட தொல்லைகள். பாண்டிச்சேரியிலிருந்து பிரெஞ்சுப் படையெடுப்பு வேறு.

கோட்டையின் மேற்குப்புற பாதுகாப்பு பலவீனமாயிருந்தது. வடபுறம் எழுந்து நிரவியிருந்த வீடுகள் எதிரிகள் பதுங்கிப் பாயப் பேருதவி செய்வனவாயிருந்தன. மேற்கே ஓடிய ஆறு அகலமானதாக, அழகு தரும் சூழ்நிலையாக, அமைந்திருந்ததே ஒழிய, ஆழமாக, பகைவர் கடந்து வருவதைத் தடுப்பதாக இல்லை. மதிற் சுவர்கள் எழுப்ப, ஆழமான அகழிகள் வெட்ட, பீரங்கிகள், தளவாடங்களால் கோட்டைக் காவலைப் பலப்படுத்த எல்லாம் 'பைஸாக்கள்' செலவிடாமல் முடியுமா? ஆதாயத் தொகை அதிகரிப்பிலேயே ஆவலாக இருந்த அதி தேவதைகளுக்கு அது தெரியவில்லை.

கோட்டையிலிருந்த வீரர்கள் பலர் அதுபற்றிக் கவலையில்லாமல் இருந்தாலும் சிலர் சிந்தனை செய்தார்கள் என்பதை ஒரு ஆசிரியர் எழுதியுள்ள கீழ்க்கண்ட சம்பாஷணை மூலம் அறிய முடிகிறது.

'செங்கற்பட்டு ரோடில் நடைபெற்ற வீர விளையாட்டு பற்றி நீ என்ன எண்ணுகிருய்?'

"வீர விளையாட்டா, சரிதான்போ; முதுகுத்தோல் உரிபடாமல் தப்பி வந்தபாடு பெரும் பாடாய்ப் போய்விட்டது. பதுங்கிப் பாயும் பெருச்சாளிகளின் தொல்லைகளுக்கு முடிவு கட்டும் ஏற்பாட்டைக் காணும். கம்பெனிச் சரக்கைப் பறிகொடுத்து விட்டேன் என்ற குற்றச் சாட்டுக்கு மட்டும் குறைவில்லை. இந்த நாட்டை நமதாக்கி நம் ஆட்சியை நிலைநாட்ட வேண்டியது அவசியமாகிவிட்டது.'

'அட்டா, எவ்வளவு சுலபமாகச் சொல்லிவிட்டாரடா இவர்! அதற்கு எவ்வளவு செலவாகும்? அதை யார் கொடுப்பது? கம்பெனியின் லாபம் கம்மியாக ஆரம்பித்தால் சீமையில் உள்ளவர்கள் என்ன சொல்லுவார்கள் தெரியுமா?'

'ஆதாயத்தைத் தவிர அந்த அதிதேவதைகளுக்கு வேறு என்ன தெரியப்போகிறது?'

'வேறு என்ன தெரிய வேண்டும்? தேடு லாபம். அதையும் எவ்வளவு சீக்கிரமாகச் சேர்க்க முடியுமோ அவ்வளவு சீக்கிரத்தில் சேர். அது தான் அவர்கள் உபதேசமாயிருக்கும்.'

'அதற்காக மட்டும்தானு நாம் இங்கே இருக்கிறோம்?'

'பின் எதற்காகவாம்?'

'நாம் இந்நாட்டு மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்றிருக்கிறது. அவர்களுக்காக ஒரு நல்ல அரசாங்கம் அமைத்து அமைதியான வாழ்விற்கு வழி வகுக்க வேண்டும்.'

'பட்டாளம், படைத் தலைவர்களைப் பயன்படுத்தி நாட்டை அடிமைப்படுத்தத் திட்டமா? நல்ல கனவப்பா! நமது எஜமானர்கள் விரும்புவதெல்லாம் வியாபாரம் தான். உன் யோசனை ஒன்றும் அவர்களுக்குப் பிடிக்காது. புறப்படு, சாராயக் கடைப் பக்கம் போவோம். நல்ல சரக்கு வந்திருக்கிறதாம். இரண்டு கிளாஸ் உள்ளே தள்ளலாம்.'

இந்தச் சூழ்நிலையிலும், எழுபத்தைந்து வருட காலமாக ஏகாதிபத்தியத்திற்காக ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுகாரருக்கும் நடைபெற்ற போட்டிப் போர்களிடையேயும் கோட்டை படிப்படியாக வளர்ச்சி பெற்று வந்தது.

1746ம் ஆண்டில் மேற்குப் பக்கத்தில் மதிற் சுவர் அமைக்கப்பட்டது. வட புறத்தில் கோட்டையை ஒட்டி இருந்த வீடுகள் அகற்றப்பட்டன.

1743ம் வருஷம் தென்னிந்தியாவில் கர்னுடக நவாப் ஸ்தானத்திற்காக இருவர் சண்டை போட்டுக்கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவரான முகமதலியை ஆங்கிலேயர் ஆதரித்தார்.

இச் சந்தர்ப்பத்திலேதான் இந்தியாவிற்கு ராபர்ட் கிளைவ் வந்து சேர்ந்தார். குமாஸ்தாவாக பணியாற்றிய கிளைவ், பட்டாளத்தில் சேர மனு போட்டார்.

'சிவப்பு நாடாத்தனம்' என்பது இன்று நேற்று நிலவியதல்ல; தொன்று தொட்டே இருந்து வருவதுதான். நாட்கள் வாரங்களாகி, வாரங்கள் மாதங்களாகியும் கூட கிளைவின் விண்ணப்பத்திற்குப் பதில் வரவில்லை.

கப்பலேறி வந்திருந்த படை வீரர்களுக்கு குஷியாகக் குடிப்பதும் வேசி லோலர்களாகத் திரிவதுமே சொர்க்க வாழ்வாகப் பட்டது. அவர்கள் அதிலேயே திருப்தியடைந்து விட்டார்கள். அதைக் கண்டு குமைந்த கிளைவ் அவர்களை விட்டு ஒதுங்கித் தனியனுய் வாழ்ந்தார். புத்தகங்கள் பல இரவலாகப் பெற்றுப் படித்து அறிவை விசாலமாக்கினர். சிந்தனையிலேயே காலம் கழித்தார்.

எதிர்பார்த்த பதவி கிட்டுவதாகத் தோன்றவில்லை. தனிமை வாழ்வு பெரும் சுமையாக விளங்கிற்று. மனம் விட்டுப்பேசி, தனது ஆசைகள் லட்சியங்கள்பற்றி தான் சொல்வதைக்கேட்டு அவற்றைப் புரிந்து கொள்ளக்கூடிய ஒரு ஆத்மாவின் நட்பிற்காக ஏங்கியது அவர் உள்ளம். சூழ்நிலையில் வெறுப்புற்ற அவர் ஒரு சமயம் தற்கொலை செய்துக்கொள்ளக்கூட முயன்ருர். துப்பாக்கியால் சுட்டுக்கொண்டார். ஆனால் குறி தவறிவிட்டது. தன்னால் ஆகவேண்டிய மகத்தான காரியம் ஏதோ இருக்கிறது. அதனால்தான் குறி தவறிவிட்டது என நம்பினுர் அவர்.

கன்னி ஒருத்தியின் கவர்ச்சிமிகு வதனம் — அது அவர் ஊரில் பார்த்தவளுடைய முகமாக இருக்கலாம்—அடிக்கடி அவர் அகக்கண் முன் காட்சியளித்துக்கொண்டேயிருந்தது. மேஜை முன் அமர்ந்து பட்டியல்கள். சிட்டைகளில் கவனம் பதிக்க முயல்வார். அவர் உள்ளம் கொள்ளை கொண்ட கள்ளியின் முகம் அவற்றில் தோன்றி அவரை வாட்டும். பார்வையை வேறு பக்கம் திருப்புவார். அங்கு குவிக்கப்பட்டிருக்கும் சரக்குகளின் மத்தியில் அவள் எழில் உருவம் தெரியும். 'சே, என்ன தொல்லை இது?' என்று எழுந்து போவார்.

எட்மண்ட் மாஸ்கலீன் கிளைவிற்கு ஒரு நண்பர். மனநிலை சரியில்லாதவராக ஒரு நாள் அவர் அறைக்குப் போனுர் கிளைவ். அப்பொழுதுதான் அந்த நண்பர் அறையிலுள்ள சாமான்களை ஒழுங்காக அடுக்கி வைத்துக் கொண்டிருந்தார். அங்கு கிடந்த ஒரு அழகியின் படத்தைக் கண்டதும் கிளைவ் திகைத்து நின்றுவிட்டார். அவர் மனம் கவர்ந்த கன்னியின் சாயலை ஒத்த உருவப் படம் அது.

'என்ன ஒரு மாதிரி இருக்கிருய்? கிடங்கில் ஏதாவது தகராரு? கணக்கில் தப்பு ஏற்பட்டு விட்டதா' என்ருர் நண்பர்.

'ஒன்றுமில்லை!' என்ச் சொல்லி வெளியேறி விட்டார் கிளைவ்.

எட்மண்டிற்கு நண்பரின் குணம் தெரியும், அதனால் அவர் மேற்கொண்டு எதுவும் கேட்கவில்லை. பின்பு ஒரு நாள் கிளைவ் தானகவே எட்மண்டிடம் அந்தப் படத்தைப் பார்க்க வேண்டும் என்று கேட்டார்.

'நீயும் அந்த மோகினி மாயையில் சிக்கி விட்டாயா? எட்டாக் கனியான அவளைப்பற்ற பணக்காரனுகவும் புகழ் மிகுந்தவனுகவும் நீ ஆக வேண்டுமே!" என்ருர் நண்பர்.

கிளைவ் அந்தப் பேச்சால் கலங்கிவிடவில்லை. ஒன்று பணம் போதுமான அளவு சேகரித்துக்கொண்டு இங்கிலாந்து செல்ல வேண்டும் அல்லது அதிகப் புகழ் தேடி அப்புகழ் மூலம் அவளை இங்கு இழுக்க வேண்டும் என்று தீர்மானித்தார். அத் தீர்மானமே அவரது இலட்சியமாகி அடுத்த ஐந்து வருஷங்களில் அவர் சாதித்த செயல்களுக்குத் தூண்டுகோலாயிருந்தது.

1744ல் பிரெஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் ஐரோப்பாவில் யுத்தம் மூண்டது.

1746ல் டூப்ளே ஒரு கப்பற் படையுடன்வந்து தரையிலிருந்தும் கடலிலிருந்தும் தாக்கி கோட்டையைக் கைப்பற்றினுர். கிளைவ் கைது செய்யப்பட்டார். மூன்று வருஷங்கள் கோட்டை பிரெஞ்சுக்காரர்கள் ஆதிபத்தியத்திற்குட்பட்டிருந்தது. அவர்கள் வடபுறமிருந்த வீடுகளை அகற்றி அவற்றை இப்போது எஸ்பிளனேட் பாரி கட்டிடங்கள் அமைந்துள்ள இடத்திலிருந்து மேற்கு நோக்கி அமைக்க ஏற்பாடு செய்தனர்.

கைதான கிளைவ் பாதுகாவலிலிருந்து தப்பி, கடலூரிலிருந்த செயிண்ட் டேவிட் கோட்டைக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கிருந்த பட்டாளத்தில் ஒரு வீரனுகச் சேர்ந்து வீரச் செயல்கள் பல செய்து 1749-ல் தளகர்த்தரானுர்.

1749-ல் பிரெஞ்சுக்காரருக்கும், ஆங்கிலேயருக்கும் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கைப் பிரகாரம் செயின்ட் ஜார்ஜ் கோட்டை திரும்பவும் ஆங்கிலேயர் கைக்கு மாறியது.

பின்பு கர்நாடக யுத்தம் ஆற்காடு முற்றுகை எல்லாம் முடிந்தது. 1752-ல் கிளைவ் செயின்ட் ஜார்ஜ் கோட்டைத் தளபதியானுர். இடைக்காலத்தில் அவர் காதலியை மறந்துவிடவில்லை. அவருக்கும் அவளுக்கும் கடிதத் தொடர்பு ஏற்பட்டு நீடித்தது. கடிதம் போய்ச் சேர நான்கிலிருந்து எட்டு மாதங்களாகும், அது குறித்துக் கவலைப்படாமல் கடிதங்கள் பரிமாறிக் கொண்டிருந்தனர் இருவரும். தளகர்த்தரானதும் காதலியை வரவழைக்கத் தீர்மானித்தார். காதலி மார்க்ரட்டும் 1753-ல் வந்துசேர்ந்தாள். 1753-பிப்ரவரி 18-ல் இருவருக்கும் கல்யாணமாயிற்று.

1754-ல் அட்மிரல் வாட்சன் தலைமையில் மன்னர்பிரானின் 39-வது பட்டாளம் வந்து செயின்ட் ஜார்ஜ் கோட்டையில் முகாம்போட்



டாக்டர் விசாலாட்சி – நெடுஞ்செழியன், M. B. B. S., M. A. H., D. M. C. H., அவர்கள், வைத்திய மேல் படிப்பிற்காக அமெரிக்கா சென்று, சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்தில் 10—9—54 அன்று வந்திறங்குகையில் வரவேற்கப்பட்டபோது எடுக்கப்பட்ட படம்,

டது. கோட்டையின் அமைப்பு பல மாக்கப்பட்டது. மேற்குப்புற மதில்கள் உறுதியாக்கப்பட்டன. 'பாரக்ஸ்', 'கார்ட்ரூம்' பகுதிகளும் கட்டப்பட்டன.

1758-ம் ஆண்டில் கோட்டைத் தளகர்த்தராக ஸ்டிரிங்கர் லாரன்ஸ் என்பவர் இருந்தார். அப்பொழுது பிரெஞ்சுக்காரர்கள் கோட்டையை முற்றுகையிட்டார்கள். முற்றுகை 67-தினங்கள் நீடித்தன. 46-நாட்கள் எதிரிகளின் ஓயாத குண்டு மாரி கோட்டையைச் சல்லடைக் கண்களாகத் துளைத்தன. மாதா கோயில் ஒன்றுதான் விசேஷமாகப் பழுதடையாத இடம். கடைசியாக பிரிட்டிஷ் கப்பற்படை வந்து, பிரெஞ்சு முற்றுகையைத் தகர்த்தது. இம் முற்றுகையைத் திரமாகச் சமாளித்தவர்களில் யூசுப்கான் என்ற சிப்பாய் தலைவர் குறிப்பிடத் தக்கவர்.

அடுத்து வந்த இருபத்திமூன்று வருடங்களில் மாறுதல்கள் பல நடந்தது. 1781-ல் கோட்டை ஏறக்குறைய இக்காலத்தில் இருப்பதைப் போன்ற அமைப்பைப் பெற்றுவிட்டது. கோட்டையின் விஸ்தீர்ணம் நூறு ஏக்கருக்குமேல் பரவியது.

தற்போது மெடிகல் காலேஜ் இருக்கும் இடத்தில் இருந்த ஹாக் ஹில் என்ற குன்றை வெட்டி, கோட்டையை ஒட்டி ஓடிய ஆற்றைத் தூர்த்து; தூரமாக ஓடும்படி திருப்பிவிட்டார்கள்.

1798-ல் ஆர்தர் வெல்லஸ்லி (பின்பு வெலிங்டன் பிரபு ஆனவர்) 33-வது பட்டாளத்துடன் வந்து கோட்டையில் குடியேறினார்.

1781-ம் வருஷ மாறுதல்களுக்குப் பின்பு கோட்டையில் விசேஷமான மாறுபாடுகள் இல்லை. 1805-ம் ஆண்டிலிருந்து கோட்டையில் அமைதியான வாழ்வு ஆரம்பமாகியது. மவுண்ட்ரோடு, எழும்பூர் நுங்கம்பாக்கம் பகுதிகளில் வீடுகள் எழுந்து நகரம் பெரிதாயிற்று. அடுத்து வந்த ஐம்பது வருஷங்களில் ரோடுகள் எல்லாம் அமைக்கப்பட்டன. 1875-ல் துறைமுகத்தில் ஏற்படுத்தப்பட்ட சில மாறுதல்கள் காரணமாக கடல் வெகு தூரம் தள்ளிப்போய்விட்டது.

கொடி பறக்கும் ஸ்தலத்தில் அடைபட்டுக் காட்சிதரும் கேட்டுகள் 1942-ம் வருஷம் ஜப்பானியர் படையெடுப்பு நிகழுமோ என்ற பயத்தால் மூடப்பட்டவை.

★

## அரங்கண்ணல்--ஆண்டாள் திருமணம்





திராவிட நாடு துணை ஆசிரியர் தோழர் அரங்கண்ணல் அவர்கள் தோழியர் ஆண்டாளம்மையைத் தமது வாழ்க்கைத் துணைவியாக ஏற்கும் சிறப்பு விழா, விருத்தாசலத்தில் 9—9—54 அன்று சிறப்புற நடைபெற்றது. ஆவணப் பதிவாளர் முன்னிலையில் இருவரும் பதிவுத் திருமணத்தைச் செய்து கொண்டனர்.

தி. மு. க. பொதுச் செயலாளர் அண்ணாவும் ஏராளமான இயக்கத் தோழர்களும், கலைத்துறை அன்பர்களும், வந்திருந்து மணமக்களை மகிழ்வித்தனர். மணவிழாவினைக் கண்டு மகிழ வந்திருந்த அனைவருக்கும் நல்ல வரவேற்பும் பிற வசதிகளும் செவ்வனே நடைபெற வேண்டுமென்பதில் தோழர் அரங்கண்ணல் கண்ணும் கருத்துமாக இருந்து கவனித்தார்.

மாலையில் நடைபெற்ற சிதம்பரம் ஜெயராமன் அவர்களின் இன்னிசை மணமக்களையும் அவர்களைப் பாராட்ட வந்த அனைவரையும் தன் வசப்படுத்திவிட்டது என்பது மிகைப்படக் கூறுவதாகாது. அந்த அளவுக்கு இசையின்பத்தை வாரி வழங்கினார் ஜெயராமன் அவர்கள்.

மணமக்களுக்கு ஏராளமான பரிசுகளும் வாழ்த்து மடல்களும் வழங்கப்பட்டன.

தவிர்க்க முடியாத காரணங்களால் வர முடியாமற்போன அரங்கண்ணலன்பர்கள் பலர் தங்கள் பாராட்டுதல்களைத் தந்தி வாயிலாகவும் கடித வாயிலாகவும் தெரிவித்துக்கொண்டார்கள்.

மணவிழாவினைக் கண்டு மகிழ வந்திருந்த அனைவருக்கும் தங்குவதற்கும் குளிப்பதற்கும் சிறந்த முறையில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

தோழர்கள் இரா. நெடுஞ்செழியன், மதியழகன், கருணாநிதி, ஈழத்தடிகள், சி. வி. இராசகோபால் பா. வாணன், செழியன், தில்லை-வில்லாளன், ஜி. பராங்குசம், சி. வி, எம். அண்ணாமலை, அம்பில் தர்மலிங்கம், திராவிடப்பண்ணை முத்துகிருஷ்ணன், கருணை ஜமால், கருணானந்தம், ஷண்முகசுந்தரம், வி. புட்டாசாமி, முல்லை. சக்தி, வி. முனுசாமி, டி. சபாபதி, இரா. வெங்கடேசன், ஆர். கே. மூர்த்தி, சுந்தரேசன் ஆகிய இயக்க நண்பர்களும், கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன், நடிப்புப் புலவர் கே. ஆர். ராமசாமி, டைரக்டர் காசிலிங்கம், பஞ்சு, மதராஸ் பிச்சர்ஸ் எ. எல். எஸ். சீனிவாசன், நேஷனல் பிச்சர்ஸ் பெருமாள், எம். என். கிருஷ்ணன், திருச்சி ராணி பிச்சர்ஸ் உரிமையாளர் ஆகிய கலைத்துறை நண்பர்களும் விழாவில் கலந்துகொண்டனர். இன்னும் அவரது உறவினர்களும் நண்பர்களும் ஏராளமாக வந்திருந்தனர்.

மணமக்களின் சார்பில் தோழர் கருணாநிதி நன்றி கூற திருமண விழா இனிது முடிவுற்றது.

# அமைந்த பாதை

ப. வாணன்

## 19. பொன்னியுடன் ஆறுமுகம்

எப்படியும் இன்னும் 24 மணி நேரத்தில் கொலையாளியைக் கண்டு பிடித்து விடுவதாகப் புதிய உதவி கமிஷனர் நமது நிருபரிடம் கூறினார்.

நகர மக்கள் அனாவசியமாகப் பீதியடைய வேண்டாமென்றும், அமைதியாக போலிசாருக்கு ஒத்துழைக்குமாறும் நேற்றிரவு ரேடியோவில் பேசிய போலீஸ் மந்திரி கூறினார்.

ஆறுமுகத்தின் கண்கள் பூத்துவிட்டன. தூக்கம் தொண்டையை வந்து அடைத்துக் கொண்டது.

"நூறு பேரடங்கிய துப்பறியும் போலீஸ் படை!"

திரும்பத் திரும்ப இந்த வரிதான் கண்களில் பட்டது.

கண்களில் வழிந்த நீரைத் துடைத்துக் கொண்டு மறுபடியும் படிக்க ஆரம்பித்தான்.

"மார்பிலே மண்வெட்டியால் வெட்டியதாக யூகித்தது சரியென்றும், அந்தப் படுகாயத்தால் தான் பிள்ளை இறந்திருக்க வேண்டுமென்று ஜெனரல் ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் இன்றுகாலை 5 மணிக்கு ஏகோபித்த அபிப்பிராயம் தெரிவித்தனர்.

உத்தமநாதரைக் கண்டு பிடித்த இடத்திலே கிடந்த மண்வெட்டியின் மீதிருந்த கைரேகையின் அடையாளங்கள், கார் 'ஸ்டெய்ரிங்' மீதிருந்த ரேகை அடையாளங்கள், எல்லாம் போலீஸ் அலுவலகத்திலே பரிசோதனை செய்யப்பட்டு வருகிறது: முடிவு இன்று பகல் தெரிந்துவிடும்!"

இன்னும் ஒரு பத்தியைத் தள்ளி படிக்க ஆரம்பித்தான் ஆறுமுகம்.

"ஆறுமுகம் தான் திட்டவட்டமாகக் கொலை செய்திருக்கவேண்டுமென்ற ருஜுக்கள் கிடைத்தபோதிலும், இந்த அளவு முன்ஜாக்கிரதையாக, சாமர்த்தியமாக அவன் செய்திருப்பது கண்டு போலிசார் ஆச்சரியப்படுகின்றனர்."

"நல்லமுத்து 'அலிபி' ருஜுப்பித்துக்கொண்டாலும் முழுக்க முழுக்க இந்தக் கொலைக்குச் சம்பந்தப்படவில்லை என்று நிச்சயமாகக் கூறுவதற்கில்லை" என்று போலிஸ் அதிகாரி ஒருவர் நமது நிருபரிடம் ரகசியமாகக் கூறினார்!"

அதற்கு மேல் ஆறுமுகத்தால் படிக்க முடியவில்லை. "நல்லமுத்துவுக்கும் இந்தக்கொலைக்கும் சம்பந்தமில்லை. நானே கொலைகாரன்!" என்று கத்தலாமா என்று கூடத் தோன்றியது. அடுத்த வினாடியே கண்களிலிருந்து அவனையறியாமலேயே நீர் வழிந்தது. அப்படியே சாய்ந்து தலையை நாலு தடவை அந்தத் தூணில் இடித்துக்கொண்டான். 'ஓ' வென்று உரக்கக் கத்தி அழவேண்டுமென்ற ஒரு உணர்ச்சி அவனை விட்டுப்போகவில்லை.

பத்திரிகையின் மறு பக்கத்தைப் புரட்டினான். அதன் நடுவிலே உத்தமநாதரின் பங்களாவின் படம், போடப்பட்டிருந்தது. அதிலே கார் ஷெட்டும், பிள்ளை புதைக்கப்பட்டிருந்த மூங்கிற் புதரும் குறியிட்டுக் காண்பிக்கப்பட்டிருந்தது. அந்தப் படத்தைப் பார்த்தவுடன் அவனையறியாமலேயே ஒரு பயங்கர உணர்ச்சி ஏற்பட்டது. பேப்பரை சட்டென்று மடித்து விட்டு எழுந்து பார்த்தான்.

ஐயோ! என்ன ஆபத்து? யாரோ நாலைந்து பேர் காக்கிக்கால்சட்டையோடு வந்து கொண்டிருந்தனர். ஆறுமுகத்தின் கால்கள் அவனையறியாமலே ஓட்டமெடுத்தன. மீறு விலே இறங்கி டவுன் பக்கம் ஓடினான்.

போர் வீரர்கள் நினைவுச் சின்னத்திலிருந்து புறப்பட்ட ஆறுமுகம் கோட்டை, ரயில் பாதை எல்லாவற்றையும் கடந்து ஹைகோர்ட்டுக்குள் ஏறிக் குதித்தான்.

உயர் நீதி மன்றத்தின் நிழலிலே வந்து ஒதுங்கினான் அதற்கு மேல் ஓடுவது ஆபத்து! எந்த நிமிஷமும் போலீஸ் சுற்றிக் கொண்டிருக்கும் இடமானதால் பஜாரில் நுழைவது பேராபத்து. எப்படியாவது யாரும் கண்டுபிடிக்கும் முன்னம் கோட்டை ரயில் ஸ்டேஷன் போய் தாம்பரமாவது போய்விடவேண்டும். அப்பொழுது தான் தப்ப வழி பிறக்கும்.

திரும்ப ஹைகோர்ட்டிற்குள்ளேயே நடந்துகோட்டை ஸ்டேஷன் பக்கம் வந்தான். ஹைகோர்ட்டின் மேற்கு வாயிலருகில் வரும்போது தான் ஒரு பெரிய உண்மையைக் கண்டு பிடித்தான்.

அவனிடம் சில்லரைகளே இல்லை! ஆம்! 'காலை செய்தி' வாங்கியதோடு கடைசி ஓரணாவும் போய்விட்டது. மீதி இருப்பவைகள் மூன்று நூறு ரூபாய் நோட்டுகள் தான்!

நோட்டுகள் இருந்து என்ன பயன்?

கடலில் செல்லும்போது குடி தண்ணீர் கிடைப்பது சில சமயத்தில் அபூர்வமானதுதான்!

அதுபோல, ஆறுமுகத்திடம் முந்நூறு ரூபாய்கள் இருந்தும் பயன் என்ன? அவன் பத்து ரூபாய் களை எடுத்துப் போய் சில்லரை கேட்டாலே இந்த நேரத்திலே சந்தேகப்படுவார்களே! இனி என் செய்வது? எப்படிப்போய் நூறு ரூபாய் நோட்டை மாற்றுவது?

"ஐயோ...!" என்று அங்கிருந்த புல் தரையிலே உட்கார்ந்தான் ஆறுமுகம். மரங்களுக்கிடையிலே பார்த்தால் சட்டக் கல்லூரி தெரிந்தது! நீதி வழங்கும் இடமும், நீதிக்கு வழி காண்பிக்கும் இடமும் இரு பக்கத்திலும் தெரிந்தன!

இன்னும் ஒரு மணி நேரம் போனால், உயர்நீதி மன்றத்திலும், சட்டக் கல்லூரியிலும் ஆயிரக்கணக்கானவர் வந்துவிடுவர். அதற்குள் அந்த இடத்தைவிட்டு ஓடிடவேண்டும். இல்லையேல் பேராபத்து!

ஆம்! அவன் ஒரே இடத்தில் இருந்தால் பேராபத்து. அவனைக் காட்டிக் கொடுத்ததாகிவிடும்.

திகிலும், பயமும் உச்சநிலையில் தாக்க அப்படியே சமைந்து உட்கார்ந்திருந்தான், ஆறுமுகம்.

அப்படியே எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தானோ தெரியாது. திடீரென்று யாரோ "அண்ணே......!" என்று குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தான்.

"என்னங்கிறே, அப்படிப் பார்க்கிறே?" என்று கேட்டவண்ணம் பொன்னி அவனருகில் வந்து கொண்டிருந்தாள்.

திடுக்கிட்டு ஆறுமுகம் எழுந்து நின்றான். ரோடிலிருந்து அவன் இருந்த மர நிழலுக்கு பொன்னி வந்துகொண்டிருந்தாள். தூரத்தில் ரோடின் கோடியில் யாரோ மீசை வைத்த ஆள் ஒருவன் நின்று கொண்டிருந்தான்! அவன் பொன்னியைப் பார்த்த பார்வை ஆறுமுகத்திற்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. ஆறுமுகத்திற்குப் பொறுமை வந்தது, கோபம் வந்தது. "யாருடி அவன் பஜாரி?" என்று அருகில் வந்த பொன்னியிடம் எரிந்து விழுந்தான்.

பொன்னி திடுக்கிட்டுத் திரும்பிப்பார்த்தாள். அந்த ஆள் யாரோ? அவளுக்கு என்ன தெரியும்?

"அவன் யாரோ, காலிப் பயல். கோட்டை ஸ்டேஷனிலிருந்து என்னை முறைச்சுப் பாத்துகிட்டே வந்தான். பட்டணத்திலே வெளியே புறப்பட்டா, ரோடு பூராவும் போறவனெல்லாம், சூட்டு போட்டவனானாலும், கோவணம் கட்டினவனானாலும், எவனாயிருந்தாலும் போற வர்ற பொம்பளைங்களையெல்லாம் முறைச்சுப் பார்த்துக்கிட்டேதான் போறானுவ. அதுக்கு நானென்ன பண்றது?

"அது சரி. உன்னைத் தேடிக் கிட்டு நாய் ஓடுகிற மாதிரி ஓடியாந்தா நீ இப்படி எரிஞ்சு விழுகிறுயா?" என்று அவனை வெறுப்போடு பார்த்தவண்ணம் கூறினள் பொன்னி.

ஒரு நிமிஷம் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான் ஆறுமுகம்.

பொன்னி மறுபடியும் பேச ஆரம்பித்தாள். "என்னங்கிறே...நீ எவ்வளவு பெரிய வேலையை பண்ணிட்டு ஓடியாந்திருக்கே! இராத்திரி பூராவும் நம்பசேரி பூராவும் போலீஸ்காரவங்க வந்து உசிரை வாங்கிட்டானுவ. குடிசை, குடிசையா நுழைஞ்சு சோதனை போட்டானுவ. என்னையும் உங்கம்மாவையும் திருப்பித் திருப்பி ஆயிரம் கேள்வி கேட்டாங்க.

விடியற் காலையில் ஐந்து மணிக்குத்தான் எல்லோரும் போனங்க. அப்புறமா, நாயர் கடையிலே வந்து விசாரித்தேன். உன்னை எப்படியும் பிடித்து, இன்றைக்கு இந்த கோர்ட்டுக்கு அழைத்துக்கிட்டு வந்துடுவாங்களென்று நாயர் கூறினர். அதற்குமேல்தான் ரயிலேறி இங்கு ஓடியாந்தேன். இங்கே நீ அதுக்கு முன்னடியே வந்து உட்கார்ந்திருக்கே!" என்றாள்.

ஆறுமுகம் அதற்கும் ஒன்றும் பேசாமல் அவளையே முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு சுற்றும் முற்றும் பார்த்தான். நாலு பக்கமும் ஒரு ஆள் உயரத்திற்கு மருதாணியும் மற்ற செடிகளும் வளர்ந்து வெளியிலிருப்போர் அவனைக் காண முடியாதவாறு மறைத்துக்கொண்டிருந்தன.

ஆறுமுகம் தன்னை மறந்த நிலையில் அவளை நெருங்கினான். இது வரை இல்லாதமாதிரி, உடலெல்லாம் ஒரே உணர்ச்சி எழுந்தது ஆறுமுகத்திற்கு. யாரோ அவனை பிடித்துத் தள்ளுவதுபோல் தோன்றியது. நாக்கு வரண்டுபோயிற்று. கண்கள் காமத்தைக் கக்கின. அப்படியே பொன்னியை இழுத்து அணைத்தவண்ணம் கீழே சாய்ந்தான்.

"ஐயோ, அண்ணே........ஐயோ! வேண்டாம்......" என்று பொன்னி உளறினள். ஆறுமுகத்திற்கு அவள் கூறியது காதில் விழுந்ததாகத் தெரியவில்லை. அவனுடைய பிடி அதிகமாகியது. பொன்னி மூச்சுத் திணறினள்.

ஆறுமுகத்தின் பிடி பலமாகி யதே தவிர அவளுடைய பரிதாபக் குரல் அவன் காதிலே விழவில்லை. அவனுடைய மார்பிலே கைவைத்துத் தள்ளிப்பார்த்தாள். ஆறுமுகத்தின் பிடியை அவளால் தடுக்க முடியவில்லை.

ஆறுமுகத்திற்கு சுய நினைவு வர ஐந்து நிமிடமாகியது.

அப்படியே வானத்தைப் பார்த்த வண்ணம் படுத்திருந்தான்.

பொன்னி எழுந்து உட்கார்ந்தாள். ஆறுமுகம் பழையபடி சோகக் களையோடு காட்சியளித்தான்.

"ஆமாம்......இந்த விஷயத்தை ஏன் முன்னடியே ஏங்கிட்டே நீ சொல்லலே......!" என்றாள்.

ஆறுமுகம் பழையபடி சும்மா இருந்தான். ஆனால் இப்பொழுது அவனுடைய முகம் ஒரே வாட்டமாக இருந்தது. தனக்குக்கிடைத்த அரிய பொருளை இழப்பதுபோல அவளைப் பார்த்தான்.

"நீ நிசமாலும் பெரிய ஐயாவைக் கொலே செய்தியா?"

ஆறுமுகம் எழுந்து உட்கார்ந்தான். பொன்னியிடம் பூராக்கதையையும் கூறவேண்டுமென்ற ஆசை வந்தது, அவனுக்கு. அவளுடைய கையை பிடித்து இழுத்துத் தன் பக்கத்திலே அவளைப் படுக்கவைத்தான். பொன்னி ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தாள்.

"நான் கொல்லவில்லே..." என்று மெதுவாகக் கூறினன் ஆறுமுகம்.

"பின்னே ஏன் ஓடியாந்துட்டே ......?" என்றாள் பொன்னி அவன் தோளைப் பிடித்தவண்ணமே.

"அவர்கள் பிணத்தைக் கண்டு பிடிச்சுட்டாய்களே!"

"பிணத்தைக் கண்டுபிடிச்சா உனக்கென்ன?"

"பிணத்தை நான்தான் அங்கே புதைத்தேன்!"

"நிசமாலுமா......ஐயோ......ஏன் புதைத்தே......அப்படின்னு உண்மையா கொலேசெய்தவர்களை உனக்குத் தெரியுமா?"

ஆறுமுகம் பேசாமலிருந்தான். சில விநாடிகள் பொறுத்து, "அவர் எப்படி செத்தாருன்னே தெரியலே" என்றான். பொன்னியின் முகத்திலே ஆச்சரியம் எதிரொலித்தது.

"என்னண்ணே, என்னையே ஏமாற்றப் பார்க்கிறியே! உன் காரிலேயிருந்து சீமைச் சாராயப் புட்டி எடுத்தாங்களாமே!"



"அட கழுதே! அது நளினி கொடுத்தது!"

"நளினியா......" என்று எழுந்து உட்கார்ந்தாள்.

"ஆமாண்டி. அவதாண்டி பெரிய ஐயா உசிரைக் குடித்தவள். அவ கட இருந்துட்டு வந்ததாலேதான் அவர் இறந்துட்டார். அதைத் தெரிந்து கொள்ளாமல் நரன் பைத்யக்காரத்தனமா அவரைக்கொண்டு போய் புதைச்சுட்டேன்..." என்று கூறிக்கொண்டே அழுதுவிட்டான் ஆறுமுகம்.

பொன்னிக்கும் அழுகை வந்து விட்டது அழுதுகொண்டே "கோர்ட்டிலே தூக்குத் தண்டனை கொடுப்பாங்களாமே!" என்றாள். ஆறுமுகம் அவளுடைய தொடையில் தலையை சாய்த்து விம்மினன்.

பொன்னி கண்களில் நீர் கலங்க, "அட பாவி! இப்படிப் பண்ணிட்டியே! ஆரம்பத்திலிருந்தே, உன்னை நம்பின என்ன ஆபத்து வருமோன்னு பயந்துகிட்டே இருந்தேன். எந்தநாளிலும் எனக்குச் சந்தோஷமே கிடையாது. பாதி நாளைக்கு வயிறு காயும். பாதி நாளைக்கு ஒரு சீக்கு இல்லாட்டி இன்னொரு சீக்கு வரும். மிஞ்சிய நேரத்திலே உன்கிட்டம் அடிபடணும்; உங்கம்மாகிட்டே திட்டு வாங்கனும். இப்போ எல்லாரையும் அவந்தரையா விட்டுட்டு போறே, என் ஆயுட்கால பூராவும் இந்த மாதிரியா போகணும்? நான் ஒரு பாவமும் செய்யவில்லையே! எனக்கு ஏன் இந்த முடிவு ஏற்படணும்?" என்று கூறிக்கொண்டே அழ ஆரம்பித்துவிட்டாள்.

அவள் அழுவதைப் பார்த்தவுடன் ஆறுமுகம், தான் அழுவதை நிறுத்திவிட்டான்.

"சரிதாண்டி, சும்மா இருடி! நீவேறே என் உயிரை வாங்கிறியா?" என்று கூறிக்கொண்டே எழுந்து நின்றான்.

அடுத்த விநாடியே அவன் உடல் பூராவும் தூக்கிவாரிப் போட்டது.

தெருக்கோடியில் முன்பு பொன்னியோடு வந்த மீசைக்காரன் இப்பொழுது நாலைந்து போலீஸ்காரர்களோடு வந்துகொண்டிருந்தான். அவர்களைப் பார்த்தவுடன் அப்படியே குனிந்து பொன்னியின் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தான்.

"என்னங்கிறே, ஏன் இப்படி பேய் பிடிச்சமாதிரி ஓடுறே......" என்று கூறிக்கொண்டே அவளும் பின் தொடர்ந்தாள்.

"சத்தம் போடாமே ஓடிவாடி! கழுதே, உன்னலே வந்ததுதான் இந்த ஆபத்து!" என்று கூறிக் கொண்டே மரங்களைத் தாண்டி ஓடி, ரோடுக்கு வந்தான். ரோடு கோடியில் வந்த போலீஸ்காரர்கள் அப்பொழுதுதான் ஹைகோர்ட்டு காம்பவுண்டுக்குள் நுழைந்தனர்.

ஆறுமுகத்தையும், பொன்னியையும் பார்த்தவுடன் அந்த மீசைக்காரன் கைகாட்டி அவர்களைக் காண்பித்தது அவனுக்குத் தெரிந்தது.

அந்தக் காட்சி ஆறுமுகத்திற்கு இன்னும் பயத்தைக் கொடுத்தது.

ரோடைத்தாண்டி சைனபஜார் பக்கம் ஓட எண்ணி வந்தான்.

சைன பஜார் பக்கமும் நாலைந்து போலீஸ்காரர்கள் நின்று கொண்டிருந்தனர்.

ஆம்! ஹைகோர்ட்டின் நாலுபக்கமும் போலீஸ்காரர்கள் வளைத்துக் கொண்டிருக்கின்றனர். இன்னும் கொஞ்சநேரம் அந்த இடத்திலே நின்று கொண்டிருந்தால் பின்னல் வரும் போலீஸ்காரர்கள் அவனைப் பிடித்துவிடுவர். திரும்பிப் பார்த்தான். ஐயோ! அந்த போலீஸ்காரர்கள் ஓடிவந்து கொண்டிருந்தனர்.

திரும்பிப் பார்த்த பொன்னி "ஐயோ!" என்று கத்தினள்.

சட்டென்று அவள் வாயைப் பொத்தி இடுப்பில் கையைப் போட்டு இழுத்துக் கொண்டு பக்கத்திலிருந்த கட்டடத்திற்குள் நுழைந்தான். உள்ளே படிகள் சுற்றி சுற்றி ஓடின. உள்ளே நுழைந்த பின்தான் அது உயர்நீதி மன்றத்தை அழகு செய்து கொண்டு அதே நேரத்தில் மாலுமிகளுக்கு வழி காண்பிக்கும் 'கலங்கரை விளக்கம்' செல்லும்படிகள் என்பதைக் கண்டு கொண்டான்.

லைட்ஹவுசில் ஏறிவிட்டால் தப்பித்து ஓட வழியில்லை என்ற நினைப்பு வந்ததும் திரும்பி ஓடி வந்தான். ஆனல் அதற்குள் போலீஸ் படையும் அவனைத் தேடி லைட்ஹவுசை நோக்கி வந்து விட்டனர். வெளியே போவது பைத்யக்காரத்தனம் என்று எண்ணி மறுபடியும் உள்ளே ஓடினன்.

ஓடி, மாடிப்படிகளில் ஏறிக் கொண்டே இருந்தான். போகும் பொழுது சிறிது களைப்பாக இன்றுன், அந்த நேரத்திலே போலீஸாரின் பூட்ஸ் சப்தங்கள் கேட்டன.

வேர்த்து உடலெல்லாம் நனைந்தது. "ஐயோ......அம்மா......சனியனே......அட எழவே......நான் இங்கேயே சாகிறேன்......நீ போ!" என்று பெருமூச்சு வாங்க பொன்னி அவனுடைய இரும்புப் பிடியிலிருந்து தப்ப முடியாமல் அவன் பின்னே தொடர்ந்து கொண்டிருந்தாள்.

படிகள் வரிசையாக ஓடிக்கொண்டிருந்தன.

சோர்வு அதிகமானல் கூட அவனுடைய வேகம் அதிகமாகிக் கொண்டே போனது.

ஆனல் பொன்னியோ சிறிது நேரத்தில் படிகளின் மீது அப்படியே சாய்ந்தாள்!

"பொன்னி.........! பொன்னி!!" ஒரு பேச்சுமில்லை.

"அடி பாவி......!" என்று கூறிக் கொண்டே அப்படியே அவளைத் தூக்கிக் கொண்டு மறுபடியும் படிகளில் ஏறினன்.

அப்படியே எத்தனை சுற்றுகள் சுற்றி ஏறினனே தெரியாது.

திடீரென்று மொட்டைமாடி அவன் முன்னல் தோன்றியது. மொட்டை மாடியின் நடுவில் மறுபடியும்படிகள் மேலே லைட்ஹவுஸை நோக்கிபோய்க் கொண்டிருந்தன.

வேகமாக ஏறி சட்டென்று மாடியின் கதவைத் தாழ்ப்பாள் போட்டான் ஆறுமுகம். இப்பொழுது நாலைந்து நிமிட அவகாசம் கிடைத்தது, அவனுக்கு.

மொட்டை மாடியின் நடுவில் பொன்னியை போட்டான். அந்த உயரத்திலே அடித்த கடற்காற்று மயக்கம் போட்டிருந்த பொன்னியைக் கூட எழுப்பியது. கண்ணை விழித்த பொன்னி திடுக்கிட்டு எழுந்தாள்.

கிழக்கே நோக்கினல் பெருங் கடல். மற்ற பக்கங்களில் சென்னை நகரத்தின் கட்டிடங்கள் சிறு சிறு பொம்மைகளாகக் காட்சியளித்தன.

சுற்றி ஒரு முறை பார்த்துவிட்டு கடைசியாக ஆறுமுகத்தைப்பார்த்தாள் பொன்னி. கோபக்களையோடிருக்கிய வண்ணம் அவளையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான் ஆறுமுகம்.

[தொடரும்]

## திருச்சி நிருபர் தீட்டவேண்டிய

# கடிதம்

அன்புள்ள ஆசிரியருக்கு,

வணக்கம். சினிமா ஒழிப்புபற்றியும், கண்ணீர்த்துளிகள் சினிமாமூலம் பணம் சுரண்டுவதுபற்றியும் கண்டிக்க ஒரு மாபெரும் பொதுக்கூட்டமாவது, மாநாடாவது உடனடியாக நடத்தியாகவேண்டும் என்றும், சினிமா என்பது கள்ளுக்கடை, குச்சுக்காரி விடுதி ஆகியவைகளைவிடக் கேவலமானது, ஆபத்தானது, தீமை பயப்பது, என்றெல்லாம், புள்ளி விவரத்துடனும், தங்கள் தலையங்கங்களிலிருந்து அருமையான பகுதிகளை மேற்கோள் காட்டியும், நான் ஒரு நீண்ட கட்டுரை அனுப்பி, அதை ஒரே நாளில் போட முடியாவிட்டாலும், இரண்டு மூன்று நாட்கள் தொடர்ந்து வெளியிடும்படியும் கேட்டுக்கொண்டு தங்களுக்கு ஒரு கடிதமும் அனுப்பியிருந்தேன். தயவு செய்து, என் கட்டுரையை இப்போது பிரசுரிக்கவேண்டாம். கட்டுரை அருமையானதுதான். எனக்கே அதை எழுதி முடித்துப் படித்துப் பார்க்கும்போது, பெருமையாக இருந்தது. இந்தக் கண்ணீர்த் துளிகளுக்குத்தான் அடுக்கு மொழி தெரியும், நமக்கெல்லாம் வராது, என்று இருந்த எண்ணத்தை என் கட்டுரை தூள்தூளாக்கிவிடக் கூடியதுதான். சினிமாவுக்கும் சிலம்பக்கூடத்துக்கும் உள்ள பேதத்தை விளக்கியிருக்கிறேன். கட்டுரை அருமையாக இருப்பினும், அதை இப்போது பிரசுரிக்கவேண்டாம். இங்கே நேற்றுத்தான், இரத்தக் கண்ணீர் சினிமா போஸ்டர், ஒட்டி இருக்கிருர்கள். மூன்று கலர்! ரொம்ப ஜோராக இருக்கிறது. நடிகவேள் ராதா நடிக்கும் அதி அற்புதமான படம், என்று விளம்பரம் செய்திருக்கிருர்கள். கதை வசனம் திருவாரூர் தங்கராஜ் என்றும் விளம்பரம் இருக்கிறது. தீபாவளிக்கு வெளி வருகிறதாம்!! அந்தப் போஸ்டரைப் பார்த்ததும், நான்—நான்மட்டுமா—நமது தோழர்கள் அவ்வளவு பேருமே ஆனந்தத்தில் மூழ்கினோம். பராசக்தி போஸ்டர்களைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர்த்துளிகள் எவ்வளவு கர்வம் அடைந்தன! இப்போது நமது மனமெலாம் மகிழும்படியாக இரத்தக் கண்ணீர் வருகிறது. இந்தப் படம், அமோக வெற்றி தர, நாம் நம்மாலான தொண்டுகளைச் செய்ய வேண்டுமல்லவா! சிலகாலமாக, கண்ணீர்த் துளிகளைக் கண்டிப்பதற்காக, நாம் சினிமாவையும், அதற்குக் கதை எழுதிக் காசு பறிப்பவர்களையும், நடித்துப் பொருள் திரட்டுகிறவர்களையும் பலமாகக் கண்டித்து, இழிவாகப் பேசி, ஏளனம் செய்துவந்தோம். சினிமா ஒழிப்பு நாள் கூட்டம்கூட நடத்தினோம். நமது சண்டமாருதப் பிரசாரத்தின்பலனுக, பொதுமக்களும், குறிப்பாக நமது கழகத் தோழர்களும், சினிமாமீது வெறுப்புக்கொண்டு, இரத்தக் கண்ணீர் படத்துக்கு அலட்சியம் காட்டிவிட்டால், என்ன செய்வது என்று, நான் விசாரப்பட்டேன். பிறகு எனக்கே ஒரு தைரியம். நீங்கள் சும்மா இருக்கமாட்டீர்கள்—ஒரு நாலு டோஸ் புது மருந்தாகக் கொடுத்து விடுவீர், சமயம் தெரியும் உமக்கு என்ற எண்ணம் பிறந்தது.

தகுந்த முறையில் உமது கட்டுரை இருக்கும் என்றபோதிலும், என் சிறு உதவியையும் மறுக்கமாட்டீர்கள் என்ற நம்பிக்கையுடன் நான் சில யோசனைகள் கூறுகிறேன்.

சினிமா சிந்தனையைக் கிளறும்!

பொழுது போக்குங்கள்!
புத்தறிவும் பெறுங்கள்!!

சினிமா ஒரு சிந்தனைச் சிலம்பக்கூடம்!

பெரியார் பொன்மொழி வெண் திரையில்!

திராவிடர் திருநாள்—
இரத்தக் கண்ணீர் திரையிடப்படும் நன்னுள்!!

தங்கராஜ் தரும் தமிழ் ஓவியம்

நடிகவேள் நாட்டுக்கு அளிக்கும் நவீன காவியம்.

பெரியார் பன்முறை பாராட்டிய
இரத்தக் கண்ணீர்!

திரை உலகில் திராவிடர் கழக வெற்றி!

கண்ணீர்த்துளிகள் ஓடுகின்றன—
இரத்தக்கண்ணீர் வந்துவிட்டது!!

இவ்விதம், பெரிய எழுத்தில் தலைப்புகள் ஒவ்வொரு நாளும் போட்டுக் கொண்டு வருவது நல்லது என்று எண்ணுகிறேன். நாங்கள், இதை ஒரு திருவிழாவாகவே கருதுகிறோம். நடிகவேள், இரத்தக்கண்ணீரில் நடிப்பதற்காக, இதுவரை தமிழ்நாட்டு நடிகர் யாருமே வாங்காத அளவு பணம் பெற்ருர் என்று தெரிகிறது—ஆஹா! மகிழ்ச்சி, மகிழ்ச்சி! சினிமா உலகம் இனித்திராவிடர்கழகத்தின் கருவியாகி விடவேண்டும். இனி, சினிமா ஒழிப்பு வேலையைவிட, சினிமாவை நம்முடையது ஆக்கிக்கொள்ளும் வேலைத் திட்டம் நல்லது என்று எண்ணுகிறேன். நான்கூட, "நான் கண்ட களம்" என்ற நவீனம் தயாரித்து வருகிறேன். தங்கள் சிறு கதைகளில் ஒன்றுதான், இதற்குமூலம். தாங்கள் அனுமதி தந்தால், மூலம் தங்கள் பெயரிலும், திரைக்கதை வசனம் என் பெயரிலும் போட்டுக்கொள்ளலாம்.

எதற்கும், சினிமா ஒழிப்பு, வெறுப்பு என்பனவற்றை கொஞ்சகாலம் நிறுத்திக்கொள்வது நல்லது.

எனவே, சினிமா ஒழிப்பு சம்பந்தமாக நான் அனுப்பிய கட்டுரையை இப்போது பிரசுரிக்கவேண்டாம்.

இப்படிக்கு,
சினிமா வெற்றி அரசன்.

★ சினிமா வெறுப்பரசன் என்ற பெயரை மாற்றிக்கொண்டேன்.

---

# நெல்லை மாவட்ட
## தி. மு. க. 2-வது அரசியல் சமூக சீர்திருத்த மாநாடுகள்
## செப்டம்பர் 18, 19-தேதிகளில் பாளையங்கோட்டையில் நடைபெறும்

Edited, Printed & Published by C. N. Annadurai M. A., at "Dravida Nadu" Press, 95. Tirukkachinambi St, Kancheepuram.

